# தாலாட்டு

## தொகுப்பு நூல்

தொகுப்பாசிரியர் :

**தமிழண்ணல்**




காரைக்குடி

செல்வி - 5
முதற் பதிப்பு : சனவரி, 1956
இரண்டாம் பதிப்பு : பிப்பிரவரி, 1958

தமிழண்ணல்
எழுதியவை
குழந்தைகள் இலக்கியம்
மொழிவழிச் சிந்தனைகள்
இலக்கியத்தில்
இன்பச்சுவை



அச்சிட்டோர் : சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி

# பதிப்புரை

குழந்தை 'குவா' என்ற குரலோடு உலகைப் பார்க்கும் பொழுது 'ஆராரோ' என்ற தாலாட்டு இசையும் உடன் பிறக்கிறது. இவ்வாறு மனிதப் பிறவி தோன்றிய காலம் முதற்கொண்டு தாலாட்டும் தோன்றி வளர்ந்து வருகிறது. இதனால் எல்லா இலக்கியங்கட்கும் முற்பட்டது என்ற சிறப்போடு, தாய்மார்களால் இசைகூட்டிப் பாடப்பெறும் இத் தாலாட்டுக்களின் கருத்தும் கவிதை நயமும் சொல் வளமும் சங்க இலக்கியம் முதலிய பிற இலக்கியங்களில் காணப்படும் அளவு பெருமை பெற்றும் விளங்குகின்றன.

எல்லா மொழியினரும் அவரவர் பழக்கவழக்கங்களுக்கு ஏற்பத் தாலாட்டுப் பாடுகிறார்கள். ஓசை நயத்திலேதான் குழந்தைகள் தூங்குகின்றன என்றாலும் அவைகளின் பிற்கால வளர்ச்சியில் செம்மை நெறி நின்று வாழப்பயன்படுமாறு கருத்து நயமும் மூளையின் ஒரு பகுதியில் பதிவு செய்யப்படுகிறது என்பதை மனவியல் நுண்ணறிவாளர் நன்கு அறிவர். இதனைத் தெரிந்து தாய்க்குலம் உலகிற்கு அளித்துவரும் அழியாச் செல்வத்திற்கு என்ன கைம்மாறு செய்ய இயலும்!

ஒரு தாய் தன் குழந்தைக்குத் தாலாட்டும் பொழுது அக்குழந்தை மெய்மறந்து தூங்குகிறது. அதைக் கேட்கிற நாம் செவிகுளிர், மனங்குளிர இன்பமடைகிறோம்! இவ்வருமையான தாலாட்டுக்களை, நாகரிகக் காலமாகிய இந்நாளில் சிதைந்து போகாமல், என்றும் நிலைத்து நின்று விளங்கச் செய்யும் முறையில், ஒரு சேரத் தொகுத்து வெளியிடுதல் வேண்டுமென எண்ணினோம்.

இதனைச் செவ்வனே செய்துதர வேண்டுமென்ற எங்கள் விருப்பத்தை, தமிழே வாழ்வின் இன்பம் எனக் கொண்ட நண்பர் தமிழண்ணல் அவர்கள் அன்புடன் ஏற்றுத் தம் தலையாய பணியாகக் கொண்டார்கள்.

தாலாட்டைப் பற்றிப் படிக்கச் சுவைதரும் ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை தந்திருப்பது அவர்களின் புலமைத் திறனை நன்கு தெரிவிப்பதாகும். இவ்வரிய பணியை மேற்கொண்டு தமிழகத்திற்குத் தனிப்பெருமை தரும் தாலாட்டை நிலையான இலக்கியமாகத்தந்த தமிழண்ணல் அவர்கட்கு எங்கள் நன்றி என்றும் உரியதாகும்!

தாய்க்குலம் வழங்கிய தாலாட்டுக்களுடன், கவிஞர் களின் தாலாட்டுக்களும் பல மதத்தவர்களின் தாலாட்டுக் களும் பிற மொழிகளில் உள்ள சில தாலாட்டுக்களும் இத் தொகுப்பின்கண் இடம்பெற்றுள்ளன. இவற்றைத் தந்து உதவிச் சிறப்பித்த கவிஞர்கள், பெருமக்கள் அனைவருக் கும் எங்கள் வணக்கமும் நன்றியும் உரித்தாகுக.

தமிழ்த்தாய் பெற்றெடுத்த மக்களாகிய ஆண் பெண் அனைவருக்கும் படிக்கப் படிக்க இன்பந்தரும் இந்நூல் இப்பொழுது இரண்டாம் பதிப்பாகப் பல புதிய பாடல் களுடன் வெளிவருகிறது.

25—2—58
காரைக்குடி.

வீர. சிவராமன்
செல்வி பதிப்பகம்

# நன்றியுரை

தமிழை மறந்திருந்த காலம் மலையேறி, 'தமிழ் வாழ்க' எனக் கூவி, தமிழை வாழ்விக்கும் அறிவொளியும் பிறந்துவிட்டது. இக்காலத்தில் தமிழ் வளரும் துறை யாது எனத் தேடிப் பாடுபடுகின்றனர் மக்கள்! தமிழ் எங்கே வாழ்கிறது? புதிய நாகரிகத்தால் சிதையாமல், வந்த மொழிகளால் வாழ்வு குலையாமல் உரிமையோடு மரபு தவருமல் நம்மொழி வாழுமிடம் நாட்டுப்புறமேயாம். பகட்டுக்குஅடிமைப் படாத உழைக்கும் இனத்தாரிடமும், பழமையை எளிதில் விட்டுவிடாத பெண்களிடமும்தான் தமிழ் இன்றும் செழிப்போடு வாழ்கிறது என்ருல் அது மிகையாகாது!

'நாட்டுப்பாடல் இலக்கியம்' என்பது ஒரு நாட்டு மக்களின் வாழ்வோடு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக ஒட்டி உறவாடி வளர்ந்துவரும் ஒரு கலை. பிறநாட்டு மக்களெல்லாம் 'நாட்டுப் பாடல் இலக்கியத்தின்' பெருமையறிந்து பல்கலைக் கழகங்களில் இடமளித்தும், விழாக்கள் பல கொண்டாடியும் அவற்றை நிலைபெறச் செய்து வளர்த்து வருகிருர்கள். தமிழர்களாகிய நாம் அத்துறையில் அதிக அளவு அக்கறை காட்டவேண்டும். தாய்மை தரும் தாலாட்டுப் பாக்கள் தமிழகம் முழுதுமிருந்து சேகரிக்கப்பெற்றவை. இத்துறையில் முயன்று சில தாலாட்டுப் பாடல்களைச் சேகரித்துச் 'செட்டிநாடும் தமிழும்' என்ற நூலில் 'தமிழறிஞர் சோமலெ' வெளி

யிட்டார்கள். கீழ்க்கண்டவர் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலுமிருந்து இவ் வாய்மொழி இலக்கியத்தை எனக்கு எழுதி அனுப்பி உதவினார்கள் :

ஈழநாடு: ஆசிரியர் ஜே. வி. கணபதிப்பிள்ளை (நொச்சிமுனை)
திரு. எஸ். குமாரசாமி (பொன்னலை)
திரு. மு. சுப்பையா செட்டியார் (மட்டக்களப்பு)

சோழநாடு: தமிழறிஞர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் (திருச்சி)

நாஞ்சில்நாடு: கவிமணியின் மருகர் திரு. கே. குமாரசாமிப் பிள்ளை (நாகர்கோயில்)

கொங்குநாடு: திரு. சீ. ப. சுப்பிரமணியம் (ஈரோடு)

இவர்கட்கும் தங்கள் கவிதைகளை இந்நூலில் சேர்த்துக்கொள்ள இசைந்த இக்காலக் கவிஞர்களுக்கும் பாரதிதாசன் பாடலைப் பதிப்பிக்க இசைந்த 'செந்தமிழ் நிலயத்தா' ருக்கும், பிறமொழிப் பாடல்களை உதவியவர்கட்கும் எனது நன்றியறிதல் உரியதாகுக ! ,பல்வேறு விதத்தாலும் அழகுபடுத்தி, இத்தொகுப்பினை தமிழகத்திற்கோர் நல்விருந்தாக்கிய செல்வி பதிப்பகத்தாருக்கு இத்துறையில் என்னை ஈடுபடுத்தி ஊக்கியமைக்காக உள்ளம் நிறைந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

1—1—1956

நெற்குப்பை

தமிழண்ணல்

# பொருளடக்கம்

# தாய்மை இலக்கியம்

> கயல் விழிக் காரிகை ஒருத்தியை அவன் காதலித்தான். எழில் காட்டி, இனிய முகங் காட்டி, இரு விழி காட்டி அவள் அவனைக் கவர்ந்து கொண்டாள். தன்னை மணந்து கொள்ள வேண்டினன் அவன். அவள் அதற் கொரு நிபந்தனை விதித்தாள்: "உன் தாயின் இதயத்தை எடுத்துவந்து எனக்குக் காணிக்கை யாக்கினல், உன்னை மணப்பேன்" என்று. காதலியின் கடைக்கண் பணியிலே காற்றெனப் பறந்தான் அவன். தாயைக் கொன்று அவ ளின் இதயத்தை எடுத்துக்கொண்டு ஓடோடி வந்தான், தன்னுள்ளத்தை ஒருத்தியிடம் பறி கொடுத்துவிட்ட வேகத்தில்! வழியில் கல் தடுக்கித் தடுமாறி விழுந்துவிட்டான். அப் போது அவன் கையிலே இருந்து கீழே விழுந்த தாயின் இதயம் பேசியதாம், 'ஐயோ! பலமாக அடிபட்டுவிட்டதா, அப்பா! பொன்னன உன் னுடம்பு நொந்துவிடுமே! சிறிது மெதுவாக ஓடிவரக்கூடாதா!' என்று.

இவ்வாறு தாய்மையுணர்ச்சியின் ஆழத்தை வலியுறுத்துகிறது ஒரு கற்பனைக் கதை. இது கற் பனையே.யாயினும், வாழ்வில் இத்தகைய தாய்மை யின் எல்லையைப் பல சமயங்களில் உணருகிறோம்.

தாய்க்கும் சேய்க்கும் உள்ள உறவின் நுண்மையை எடுத்துக்காட்டும் மற்றொரு கற்பனையும் உண்டு.

> ஆரவாரம் மிகுந்த தெருவினிடையே இருந்த வீட்டில் ஒருத்தி ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தாள். உறக்கம் என்றால் படுத்துப் புரண்டு கொண்டன்று; தன்னையும் மறந்து, உலகையும் மறந்து உறங்கினாள் அவள்!
>
> அந்தத் தெருவில், அஞ்சடி யெங்கும் திரண்டு சென்ற மக்கள் ஆரவாரம் செய்தார்கள். இருமருங்குமிருந்த கடைகளில் பேரொலி எழுந்தது. ஆறுபோற் கிடந்த தெரு முழுதும் விரைந்து திரிந்த போக்குவரத்து வாகனங்களின் கூக்குரல் வானத்தை முட்டியது. ஆனால் இவையொன்றும் அவள் காதில் விழவில்லை. கடகட வெனப் பேரிரைச்சலிட்ட "டிராம்" வண்டிகளுங்கூட அவள் உறக்கத்தைக் கலைக்கவில்லை. இவ்வாறு உலகத்தையே பொருட்படுத்தாத உறக்கத்தில் ஆழ்ந்திருந்தவள் சிறியதோர் ஒலிகேட்டுத் திடுக்கிட்டு எழுந்தாள்; பரபரப்போடு ஓடினாள்! தொட்டிலிற் கிடந்து "அம்மா" எனக் கதறிய சேயின் சின்னஞ் சிறிய ஒலிதான், தன்னை மறந்துறங்கிய தாயின் செவி நரம்புகளிலே பட்டுத் தெறித்து உள்ளத்தையும் தொட்டுவிட்டதாம்!

இத்தகைய தாய்மை, உலகிற்கு வழங்கிய முதல் இலக்கியப் பரிசுதான் "தாலாட்டு" என்பது. இது உலகிற்குப் பொதுவான கலை; தமிழகத்திற்குத் தனிச் சிறப்புத்தரும் கலை இந்த நாட்டில் ஒரு தாய் தான்பெற்ற மகனை வளர்த்து, வாழ்வுக்குகந்த கணவனுடன் மணம் செய்து வைத்து

வழியனுப்புங்கால் தரும் சீர்வரிசைகளிலே புற நாகரிகத்தை எடுத்துக்காட்டும் பொருள்கள் பல; பிறப்போடு ஒட்டிய அகப்பண்பாட்டை எடுத் துணர்த்தும் உள்ளத்துச் செல்வங்களும் பல. கலையருவியின் தாயூற்ருக விளங்கும் இத்தாலாட்டு, அவ்வுள்ளத்துச் செல்வங்களிலே உயர்ந்த ஒன்று.

நாட்டுப்பாடல் இலக்கியம்

'தாலாட்டு' என்றவுடன் அதை அலட்சியப் படுத்தி ஏதோ எல்லாந் தெரிந்ததுபோல் அறியாமை இருள்வயப்படுவோரும் உண்டு. குழந்தையை அழாமல் அடக்கி உறங்கவைக்கும் வாழ்க்கைத் தேவைக்காகவே தாய் தாலாட்டுகிருள்; 'கலை கலைக்காகவே' என்று கனவு காண்பவர்கள் வாழ்க்கையிலே பிறந்து, வாழ்க்கையிலே வளர்ந்து அதற்கே பயன்படுகின்ற இத்தகைய கலைகளைக் காணுர் போலும்! வாழ்க்கை இலக்கியங்களாகக் கருதத்தக்க நாட்டுப் பாடல்கள், பழமொழிகள் முதலியன 'எழுதாக்கிளவி'களாக விளங்கி இலக் கியத்திற்கும், மொழியாராய்ச்சித் துறைக்கும் எவ்வளவு பயன்பட்டு வருகின்றன என்பதைத் திறனுய்வாளர் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். இந்நோக்கத்துடன் தாலாட்டைப் படிக்கும்போது நமக்கு உறக்கமன்று,விழிப்புணர்ச்சி உண்டாகிறது!

இருவர் கொள்ளும் காதலைவிட, உடன் பிறந்தவர் கொள்ளும் வாஞ்சையைவிட, நாடு இனம் மொழியிற் படியும் பற்றுதலைவிட, உற்ருர் உறவினர்காட்டும் அன்பினைவிட,ஏன்-உலகளக்கும் அருளினையும்விட பிள்ளைப்பாசமே ஆழமானது,

வலிமைமிக்கது, உணர்ச்சிமயமானது! இத்தகைய தாயும் சேயும் என்ற உறவுப் பிணைப்பிலே பிறந்த இயற்கைக் கலைதான் தாலாட்டு.

நாடகக் கொட்டகைகளிலோ, பொதுக்கூட்டத்திலோ, அடுத்த வீட்டிலோ குழந்தை அழக்கேட்டு விட்டால் நாம் சகிப்பதில்லை. 'அடடா' என்றும் 'இச்சிச்சு' என்றும், 'தொல்லை பொறுக்கமுடியவில்லையே' என்றும் நமது பொறுமையின்மை பொங்கி வெளிப்படுகிறது. அதே நேரத்தில் தன் பிள்ளை எழுந்து அழுதுவிட்டால் கேட்ட அளவில் கன்றைநினைந்து கதறியோடும் கறவைப்பசுப்போல் அலறி ஓடுகிருள் தாய். அழுகைச் சிணுங்கலால் அவல உணர்ச்சிகளின் எல்லை நரம்புகளையே மீட்டி விடுகிறது குழந்தை. குழந்தையின் ஒவ்வொரு பெருமூச்சும் பொருமலும் தேம்பலும் ஒவ்வொரு சோக இசையாக, கவிதையாக, நாடகமாக மாறி விடுகின்றன தாய்மை உலகில்! இந்த நிலையிலே தான் மலைமீதிருந்து பாயும் வெள்ளருவிபோல, பனி படர்ந்த புலர் விடியலிலே மலரும் கதிரொளி போல, மணல்வெளியில் மதிவார்க்கும் நிலவொளி போல, தேன் சொட்டும் இருல்போல, இனிமை தரும் தென்றல்போல உள்ளங் கவரும் இசை தாயுள்ளத்தின் ஊற்ருகிறது; தாலாட்டும் கவிதையாகிறது. கவிதைப் பண்பற்றவர்களும் கவிஞராகி 'மலடியைப்போல் மன்ருடி' நிற்கும்போது குற்றமற்ற குழந்தையைப் பெற்ற தாய்க்கோ "கவிதையும்" சுகப்பேருகிவிடுகிறது.

ஆற்றங் கரையில் ஓய்வு கொள்ளும் மக்கள் மலர்க்காவில் தவழ்ந்துவரும் தென்றலிலே சொக்கி,

ஆற்றின் நீரோட்டம் தங்கள் கவனத்தையும் இழுத்துச் செல்லப் பார்த்துக்கொண்டிருப்பார்கள். அப்போது, அவர்கள் அந்த ஆற்றுக்கு மூலமான அருவியைப் பற்றியோ, அருவியின் துவக்கமான மலையூற்றினைப் பற்றியோ, ஊற்றுக்கு உயிர் சுரக்கும் கண்களைப் பற்றியோ சிந்திப்பதில்லை. அது போலவே வளர்ந்துவரும் மொழியொன்றின் இலக்கியச் சிறப்புக்களனைய எழிலிலே ஈடுபட்டிருக்கும் மக்கள், அவற்றின் தோற்றம் வளர்ச்சி பற்றிய உண்மைகளை அறிய விழைவதில்லை. தாலாட்டு இலக்கியத்தின் தாயூற்ருகும் என்பது இந்த உண்மைகளிலே ஒன்று. இசைச் செல்வியின் குழந்தைப் பருவத்தையும், மொழியறிவின் இளமைப் பொலிவையும், இலக்கியச் சிறப்பின் தாய்மைக் கனிவையும் தாலாட்டில் காண முடிகிறது. இப் புதிய கண்ணோட்டத்துடன் 'தாலாட்டு' அனைய நாட்டுப் பாடல்களைக் கற்றறிந்த புலமையாளர் உற்றுநோக்கிஞல் இன்றைய இலக்கியங்கள் பலவற்றுக்கு வேர், மூலம், ஊற்று, அடிப்படை எவை எனத் தெளியலாம். மேலும் ஒரு நாட்டு மக்களைப்பற்றித் தெரிந்துகொள்ள அவர்களது நாட்டுப்பாடல் இலக்கியங்களே பெரிதும் உதவும். அமெரிக்கப் பல்கலைக் கழகப் பட்டப் படிப்புக்கு நாட்டுப்பாடல் இலக்கியப் பிரிவும் பாடமாக வைக்கப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

சொல்லாராய்ச்சி

தாலாட்டு என்ற சொற்றொடர் தால் + ஆட்டு எனப் பிரியும். 'தால்' என்ஞல் நாக்கு. குழந்தையின் அழுகை ஒலியை அடக்கத் தாய் இதழ்களைக்

குவித்து, நாவினை ஆட்டிக் குரவையிடுகிருளே அதற்குத்தான் தாலாட்டுதல் என்று பெயர். அதைத் தொடர்ந்து இசைக்கும் பாடலையும் இன்று தாலாட்டெனா அழைக்கிருேம். குழந்தைக்கு முத லிற் புலனுகும் உணர்வுகளில் கூர்மையானதும் ஆழமானதும் குறிப்பானதும் செவியுணர்வே. தாயையும் பிறரையும் முதலில் குரல்கொண்டே குழந்தை வேறுபாடறிகிறது. சில மாதங்கள் கழித் துத் தாயைப் பார்த்துக் குழந்தை சிரித்தாலும் தனக்குத் தெரிந்த ஆளிடம் குழந்தை தாவினுலும் "ஆள் அடையாளம் தெரிந்து விட்டதே" என்று பெற்றவர்கள் அகமகிழ்ச்சி எய்துவார்கள். தாய் தன் குழந்தைக்கு அப்பாவை அறிமுகம் செய்து வைக்கும் கட்டம் இது!

இதனுலேதான் குழந்தையின் கவனத்தைத் திருப்பி ஒருநிலைப் படுத்தி அழுகையை நிறுத்த விரும்புவோர் முதலிற் குரலைப் பயன்படுத்துதலையும் பிறகு கைகால்களை அசைத்து முகக்குறி காட்டு தலையும் காண்கிருேம். குழந்தையின் அழுகை யொலியை அடக்க அதைவிட ஒருபடி அதிகமான ஒலியை எழுப்புவதே வழக்கமாகவிருக்கிறது. இன்றும் தாயைத் தவிர்த்து மற்றவர்கள் அழுங் குழந்தையை அடக்க முயலுங்கால் தம்மையும் மறந்து 'ஆ' 'ஓ' வென இரையக் காண்கிருேம். சில சமயங்களில் இவ்விரைச்சலைக் கேட்குங்கால், குழந்தை அழும் ஒலியையே பொறுத்துக் கொள்ள லாம்போல் தோன்றும் சுற்றி இருப்பவர்க்கு!

தாலாட்டு உலகத்தில் "ராராட்டு" எனமருவி வழங்குகிறது. இன்றும் மலையாளத்தார் 'தாராட்டு'

என்றே வழங்குகின்றனர். இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் 'தாராட்டு' எனும் வழக்கிருத்தல் கவனிக்கத்தக்கது. "தேரை தாராட்டும் பண்ணை" என்கிறார் கம்பர்.

"போற்றியுனைச் சேராரார் கண்டாசைதீராரார் பொன்னையள்ளித் தாராரார் என்று தாராட்டினாள்" என விறலிவிடு தூதிலும், 'ஊமன் தாராட்ட உறங்கிற்றே.' என்று முத்தொள்ளாயிரத்திலும் வருகிறது. 'தன, தான' என்பதுபோல 'ஆராரோ, ஆரிரரோ' என்பதும் சந்தமாகும். இதனை ராராரோ, ராரிரரோ என்றும் ஆரிவரோ என்றும் வழங்குவர். பழந்தமிழ்க் குடிகள் 'ரூரீரோ,' 'ரூரீரரோ' எனவும், நாஞ்சில் தமிழர் 'வாவாஓ' எனவும் இசையமைத்தலைக் கேட்கிறோம். ஆராரோ ஆரிவரோ,' என்ற சந்த அமைப்பு-தாய் தன் குழந்தையைப் பார்த்து முற்பிறப்பில் நீயாரோ, நான்யாரோ, நாமிருவரும் ஆராரோ என்றிருந்தோம்; இப்பிறப்பில் தாயும் சேயும் ஆனோம் என மறைமுகமாக உட்பொருள்வைத்துப் பாடுவதாகச் சிலர் தத்துவ விளக்கம் செய்யுமளவு பெருமை பெற்றுவிட்டது. மலையாளத்திலும் தெலுங்கிலும் தாய்த் தமிழைப்போலவே முறையே 'ஆராரோ, ஆரிரரோ' என்பனவே இசையமைக்கும் சந்தங்களாக இருக்கின்றன. கன்னடத்தார் மட்டும் 'ஜோ, ஜோ' வென இசையமைப்பர்.

தாலாட்டு மலையாளத்தில் தாராட்டு ஆனது போல, தெலுங்கில் "ஊஞ்சேதி" ஆயிற்று. (ஊஞ்சு-ஊஞ்சல்) கன்னடத்தார் இதனை 'ஜோகுள' என்பர். ஜோ என்பது சந்தம். பழந்தமிழ்க்

குடிகள் தாலாட்டைக் "குலு இசைப்பாடல்" என அழைப்பர். 'உய்யாலு' என்பது தெலுங்கிலும், கன்னடத்திலும் முறையே தூளியையும், ஊஞ்சலை யும் குறிக்கிறது. "உய்யாலே உறுமாலே" என வரும் தமிழ்த் தூளிப்பாட்டு நினைவு கூரத்தக்கது. தொட்டிலை மலையாள மக்கள் தொட்டில் என்றே மாற்றுமல் அழைக்கவும் தெலுங்கு மக்கள் மட்டும் "தொட்ல" என அழைக்கின்றனர். கன்னடத் திலும் இச்சொல் வழக்கு உளது.

தாலாட்டிற்குரிய பண் 'நீலாம்பரி' என்பர். சொல்லோட்டத்தோடு அமையும் ஒலிமுறையே தாலாட்டின் உயிராகும். தாய், எங்ஙனம் பாடினு லும், இசையறிவு சிறிதுமின்றிப் பாடினுலும் ஒலி யமைதியோடு ஒழுங்காகப் பாடுவதால், அது குழந்தையின் உறக்கத்திற்கு ஏற்ற இசையாகி விடுகிறது. தாயின் பெண்மை கனிந்த குரலும் இதற்குத் துணையாகவேண்டும். ஒலியமைதி கெட் டாலும், குரலினிமை பிழைத்தாலும் தாலாட்டின் பயன் மாறிவிடும்!

மேலும் தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் வழங்கும் தாலாட்டுக்கள் தமிழ் நடையையும் பண்மையுமே வெளிப்படுத்துகின் றன. தமிழின் குழந்தைகளில் ஒன்றுகிய மலையா ளத்தில் தமிழைப் போலவே தாலாட்டுப் பெரு வழக்காக இருக்கிறது. சந்தம் இசையமைப்போடு சொற்கள் பொருட் செறிவெல்லாம் அப்படி அப் படியே இருக்கின்றன. அகநானூற்றையும் புற நானூற்றையும் அழகுபடுத்தும் சங்க இலக்கியச் சொற்களையெல்லாம் காணவேண்டுமென்றுல் மலை

யாளத்திற்கும் தெலுங்கு, கன்னடம், குடகு, கொங்கணி எனத் தமிழ்க் குழந்தைகள் வளருமிடத்திற்கும் செல்லவேண்டும் போலும்!

கவிதைப் பொலிவு

தாஞக வந்தமையும் மோனே எதுகையும், நினைக்க இனிக்கின்ற இலக்கிய நயங்களும், வாழ்க்கையில் தோய்ந்த அனுபவ முத்திரைகளும், நிலைத்த உண்மையும், பழகு தமிழிலே வழங்கும் உவமை முதலிய அழகுகளும், நல்ல சொல்லாட்சியும் தடையில்லா நடைப்பெருமையும் நோக்கி இலக்கியங்களை மதிப்பிட வேண்டும். தாய்மை தரும் தாலாட்டு இவ்வகையில் பெருமை பெற்று விளங்குகிறது[4]. இப்பெருமையை உணரவேண்டுமாஞல் நிலைபெற்ற பிற இலக்கியங்களோடு தாலாட்டை ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும்.

“ கொத்துவிடா நெத்தும் கோதுபடா மாங்கனியும்
பருவப் பலாச்சுளையும் பக்குவத்து மாங்கனியும்
அக்கரையில் சர்க்கரையும் அதிமதுரத் தென்னவட்டும்
காய்ச்சிய பாலுங் கற்கண்டும் செந்தேனும்
ஏலங் கிராம்பும் இளங்கொடிக்கால் வெற்றிலையும்
சாதிக் களிப்பாக்கும் சங்குவெள்ளைச் சுண்ணும்பும் ”

சீர்வரிசைகளாகக் கொண்டு வந்தார்களாம், குழந்தை பிறந்ததைப் பார்க்கவந்த அம்மான்மார்! இப்பாண்டிய நாட்டுத் தாலாட்டைச் சிலப்பதிகாரத்துடன் ஒப்பிட்டுக் காண்போம். பேரியாற்றங்கரையில் சேரன் செங்குட்டுவன் தங்கியிருக்கையில், குன்றக் குறவர்கள் கொண்டுவந்ததாக இளங்கோவடிகள் குறிப்பிடும் காணிக்கைப் பொருள்கள்

பற்றிய பா நடையும் பண்பும் மேற்கண்ட தாலாட்டு வரிகளை நமக்கு நினைவுபடுத்துகின்றன.

" ஏல வல்லியும் இருங்கறி வல்லியும்
கூவை நூறுங் கொழுங்கொடிக் கவலையும்
தெங்கின் பழனும் தேமாங்கனியும்
பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களும்
காயமுங் கரும்பும் பூமலி கொடியும்
கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையின் இருங்கனித் தாறும்"

(சிலம்பு-காட்சி-37)

மேலும் பாண்டியநாட்டுத் தாலாட்டில்,

வாழை இலைபரப்பி வந்தாரைக் கையமர்த்தி
வருந்தி விருந்துவைக்கும் மகராசர் பெயரனோ ?
தென்னை இலைபரப்பிச் சென்றோரைக் கையமர்த்தித்
தேடி விருந்தழைக்கும் திசைக்கருணர் பெயரனோ ?

என்ற தாய்மைதரும் தாலாட்டு வரிகள்,

"செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும்" குறட்பண்பாட்டை அப்படியே படம் பிடித்துக் காட்டுகின்றன. 'சோதிச் சுடரொளியே' என்று தன் குழந்தையைப் பாராட்டுகிறாள் தாய். "சோதியே சுடரே சூழ் ஒளி விளக்கே" என்று இறைவனைப் பாராட்டியழைக்கிறார் மாணிக்கவாசகர். நாஞ்சிற் பகுதித் தாலாட்டில் 'எலும்புருகப் பெற்றெடுத்த இலஞ்சியமே' எனத் தாய் தன் குழந்தையைப் பாராட்டுவதுபோல "உமையாள் பயந்த இலஞ்சியமே" என்று தமது திருப்புகழில் முருகனைப் பாராட்டுகிறார் அருணகிரிநாதர்.

"இலையுதிரப் பிஞ்சுவிடும்"
'வண்டாடப் பூமலர'
'சாலை வழியுறங்க'
'பாதிநிலாத் தான்தூங்க'
'சொல்லாற் புகழடைக்கும்'

என்றெல்லாம் வருகின்ற தொடர்கள் பல இலக்கிய நயத்தின் எல்லையையே எட்டிப் பிடிக்கின்றன.

ஈழநாட்டுத் தாலாட்டில் தம்பி அழுத கண்ணீர் ஆறுகப் பெருகும் கற்பனையும், பாண்டிய நாட்டுத் தாலாட்டில் குழந்தையை அடித்தவர்கட்குத் தாயாட்சியில் அளிக்கப்படும் தண்டனையும், சோழ நாட்டுத் தாலாட்டில் தச்சரின் பொறுமை பற்றிய செய்தியும் போன்ற பல இடங்கள் நகை என்னும் சுவைக்கே எல்லை வகுக்கின்றன. சோழ நாட்டுப் பா ஒன்று ஊஞ்சலின் சிறப்பையும், தாய் மாமன் தரும் சீர் வரிசைகளின் பெருமையையும் விளக்குகிறது. "காதுகுத்துவிழா" சோழ நாட்டில் மிகச் சிறப்புடையதோர் சடங்கு என்பதனை அப்பகுதித் தாலாட்டு எடுத்தியம்புகிறது. ஈழநாட்டு மருத்து வச்சி வாழ்த்து ' "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற புறநானூற்று வரிகளை நினைவு படுத்துகிறது. பொதுவாக 'ஏலப்பூ', 'இலஞ்சிப்பூ' என்றெல்லாம் குழந்தையை உவமிப்பது சங்கப் புலவர்களின் இயற்கை அறிவினை நினைவூட்டுகிறது. தொட்டில் வருணனையும், பாலூட்டும் சங்கின் அழகும் கம்பனைக் காட்டுகின்றன. குழந்தையைத் தாய் பாராட்டும்போதெல்லாம் பாரதியாரின் கண்ணன் பாட்டும், தேவார, திருவாசகமும் நினைவிற்கு வருகின்றன. ' சந்தணர், என்னரியான், புனக்கிளி,

திசைக்கருணர்' அனைய சொல்லாட்சிகள் புதுமையும் பொருட்செறிவும் உடையன.

வாழ்வெல்லாம் விழா

ஒரு காலத்தில் நம்நாடு செல்வத்திற் செழித்திருந்தது. குடும்பத்தில் நடக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் எவ்வளவு மகிழ்ச்சியோடு பொன்னையும் பொருளையும் அள்ளிவீசி, கண்ணையும் கருத்தையும் கவரும் விதத்தில் தமிழ் மக்கள் கொண்டாடினார்கள் என்பதைச் சிந்தித்தால் இவ்வுண்மை விளங்கும். குழந்தை பிறப்பதற்கு முன்பே அதற்கு விழாவெடுத்தார்கள் இந்த நாட்டில்! மாந்தர் இறந்தபிறகும் கல்லெடுத்துச் சிறப்புச்செய்வது போன்ற நிகழ்ச்சிகள் பல நிகழ்த்திய நாடுதான் இது. தாய் கருவுற்ற உடனேயே விழா துவங்குகிறது. பூச்சூட்டல், வளைகாப்பு, சீமந்தம், மருந்து குடித்தல் முதலியன கன்னிப்பெண் ஒருத்தி தாயாகும் அருமையைப் பெருமைப்படுத்தும் விழாக்கள்! பெண்கள் இதில் அதிக ஈடுபாடு காட்டுவர். குழந்தை பிறந்ததும் மங்கலச் சடங்கு, தொட்டிலிடுதல், பெயரிடுதல், காதுகுத்தல், ஆண்டுநிறைவு (புதுமை). பள்ளியில் வைத்தல் என்று வாழ்நாள் அனைத்தும் விழாவினை நிரப்பிய நாகரிகம் தமிழகத்திற்கு உரியதாகத் தெரிகிறது. இந்த விழாக்களில் எவை எவை எவ்வப் பகுதியில் சிறப்புடையனவோ அவைகளை அவ்வப்பகுதித் தாலாட்டுக்களிற் பரக்கக் காணலாம். தாலாட்டு முழுதும் தாய்க்குரிய இலக்கிய மாகையால் அதில் மாமன்மார் பெருமையும், அவர் தரும் சீர்வரிசைகளின் சிறப்பும் மிக அழகாகச் சொல்லப்படுகின்றன. வள்ளி தாலாட்டு

சங்ககாலக் காதல் முறையையும், சொக்கர் மீனுள் தாலாட்டு உழவுத்தொழிலின் உயர்வினையும், பாண்டிய நாட்டுத் தாலாட்டு தமிழகத்தின் செல்வச் செழிப்பையும் நாகரிகத்தையும் விளக்குகின்றன. இவ்வாறு நடையழகில் செயங்கொண்டானையும், இனிமையில் இளங்கோவையும், கற்பனையில் கம்பனையும், சொல்லாட்சியில் மணிவாசகரையும், நாகரிக விளக்கத்தில் சங்ககாலப் புலவர்களையும் ஒப்புமையாகப்பெற்றுப் பெருமையுடன் விளங்கு கிறது தாலாட்டு!

## தாயும் தாலாட்டும்

இத்துணைக் கற்பனைச் செறிவும் இலக்கிய நயங்களும் அமைத்துப் பாடுவதால் குழந்தைக்கு என்ன பயன்? தாலாட்டின் முதற்பயன் குழந்தை யின் உறக்கமல்லவா? அந்தக் குழந்தைக்குப் புரியாத நிலையில் நாம் நம் திறமையைக் காட்டுவ தால் என்ன பயன்?— இவ்வாறு பாமரனுக்கும் புரியும் நடையிலே எழுதுவதாகக் கூறிக்கொண்டு கடைசியில் தங்களுக்கும் பாமரனுக்கும் புரியாத முறையில் கலப்படத் தமிழில் எழுதி எழுதிக் கெடுத்து, நல்ல தமிழ் நடையை நையாண்டி செய்து வருவோர் கேட்பர். குழந்தைக்கும் புரியும் நடையிலே அல்லவா தாலாட்டிருக்க வேண்டும் என்று கூக்குரலிடுவர். குழந்தையின் மழலைமொழி யிலே பாடினாலும் குழந்தைக்குப் புரியப்போவ தில்லை. வளரும் குழந்தை யுள்ளமும் அதனை விரும்பாது. 'குழந்தை மொழியிலே' தாலாட்டுவ தென்றால் குழந்தை அழும்போது நாமும் கூடவே அழுதுவிடுவதுதான் முடியக்கூடிய காரியம்!

தமிழ் நூல் வகைகளிலே "தூது" என்பதும் ஒன்று. காதலரிடையே மனக்கருத்தைப் பரிமாறிக் கொள்ள 'மான், தென்றல், மேகம், நாரை' முதலிய அஃறிணைப் பொருள்களையும் தூது விடுவதாகப் பாடுவர். இப்பொருள்கள் தூது சென்று திரும்புதலும், தூதினை எடுத்துரைத்தலும் இயலாத காரியம் என்பது எல்லோருக்கும் தெரியாததன்று. இருப்பினும் காதலர் தங்கள் மன ஆறுதலை வேண்டி, அஃறிணைப் பொருள்களிடத்தும் தங்கள் வருத்தத்தை எடுத்தியம்புவதாகக் கவிஞர்கள் கருதினர்; கற்பனை ஓவியம் புனைந்தனர். உள்ளத்துத் துன்பம் தாங்கவியலாத நிலையில் அதனை எடுத்துப் புறத்தே சொல்லுவது ஆறுதல் பெறும் வழியாகும் என்ற மனவியலே இதற்கடிப்படையாகும். அதுபோலத் தன் பிறந்தகப் பெருமை, உடன் பிறந்தோர் தரும் சீர்வரிசைகளின் உயர்வு, குழந்தையின் அருமை பெருமைகள், அது பிறந்த குடிப்பெருமை ஆகிய பலவற்றை வாய்விட்டுச் சொல்லி மனமகிழ்ச்சியை மிகுதிப் படுத்திக் கொள்ளும் ஒரு வாய்ப்பாகவே தாய் தாலாட்டைப் பயன்படுத்திக் கொள்கிறாள். துன்பம் பிறரிடம் சொன்னால் குறையும்; இன்பம் பிறரிடம் சொன்னால் நிறையும் என்பது இதன் மூலம் விளங்குகிறது.

**மனவியல் ஆராய்ச்சி**

மேனாட்டு மனவியல்துறைப் [1] பேராசிரியர் ஒருவர், ஒரு சமயம் கீழ்க்கண்ட உண்மையை விளக்கினார். மனிதன் காண்பன, கேட்பன அனைத்தும் அவன் கவனித்தாலும் கவனிக்காவிட்டாலும்,

---

1. Robert Bridges (A New world-Page—9)

அவனுடைய மூளையிற் பதிவாகிவிடுகின்றன. சில செய்திகள் ஆழப் பதிவதும், சில அரைகுறையாகப் பதிவதும் அவனுடைய இயல்பு, பழக்கம், பண்பாடு களைப் பொறுத்திருக்கிற தென்றாலும் பதிவாவது மட்டும் தவறுவதில்லை. மனிதன் மூளையில் கல்வி 'பதிவாவது' ஒரு தன்மையாக இருந்தாலும், 'வெளிப்படுவது' அவனது சூழலாலும் தன்மை யாலும் வேறுபட்டு விடுகிறது. 'பதிவு' மனித உடற் கூற்றின் இயற்கை. 'வெளிப்பாடு' மனிதப் பண்பின் வேறுபாடுகளால் வரும் விளைவு.

'அறிவும்' 'அறியாமையும்' உருவாவது பதிவினால் அன்று, வெளிப்பாட்டினாற்றான்! சிலர் படித்திருந்தும், வெளிப்படுத்தும் ஆற்றலின்மை யால் தவிக்கும்போது, குற்றம் படிப்பிலன்று அவர் ஆற்றலில் என நாம் உணர்கிறோம்.

எடுத்துக் காட்டாகத் தெருவில் செல்லும் பொழுது நாம் காண்பனவும் கேட்பனவும் நம் கவ னத்திற் படுவதில்லை. காரணம் நம் சிந்தனை வேறு எங்கோ இருப்பதுதான். இவ்வாறு நம் கண்ணிற் பட்டும் நாம் கவனியாதனவும், நம் காதில் விழுந் தும் நாம் வாங்கிக்கொள்ளாதனவுங்கூட நம் மூளை யின் அடித்தளத்திற் பதிவாகின்றனவாம். பிற் பாடு நம் இயல்பிற்கு ஏற்ப அவற்றில் பல வெளிப்பட்டுப் பயன் தருகின்றன என்றும், பல வெளிப்படாமலே தேங்கி மறைமுகமாகப் பயன் தருகின்றன என்றும் அறிஞர் கருதுகின்றனர். இது தனி மனிதனோடு முடிவடைவதன்று; பரம் பரையையே தொடர்வது! 'பரம்பரை'யின் உண்மை இதுதான். தாத்தா இசையறிவும் ஆர்வமும்

சுவைத் தன்மையும் மிக்கவராக விளங்கலாம். ஆனால் பாடும் பண்பும் குரலும் வாய்க்காது போக லாம். அவருடைய பெயரன் சிறு வயதிலேயே பெரிய இசைப்புலவனாக உலகப்புகழ் பெறும்போது உலகம் அவனைப் பாராட்டும். அப் பாராட்டுக் குரிய புலமைச் சொத்தினைச் சேமித்து வைத்தவர் அவனுடைய தாத்தா—குடும்பம்—பரம்பரை என் பதை உணர்கின்ற உளநூல் அறிஞர்கள் பரம் பரையைப் போற்றுகின்றனர். இத் தத்துவம் நமக்கு விளங்கினால் நம் முன்னோர் நமக்குச் சேமித்து வைத்த சொத்துசுகம் பொன்னும் பொருளுமே என்று எண்ண மாட்டோம், புலமை யும் பண்பாடுமே என எண்ணிப் போற்றுவோம்.

குழந்தைப்பருவத்தில் இப்பதிவு பசுமரத்தாணி போற் பதியும்; அதுவும் பாதி உறக்கத்தில் இருக்கும்போது கேட்கும் கருத்துக்கள் மனத்தில் இன்னும் ஆழமாகப் பதிகிறதாம். தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும் என்பதற்கு நாம் கருது வதைவிட உயர்ந்த பொருள் உண்டு. எனவே, குழந்தைப் பருவத்தில் தாய் பாடும் தாலாட்டில் 'இசை' உறக்கத்திற்குப் பயன்படுவதுபோலவே 'இயல்' உள்ளத்திற்குப் பயன்படுகிறது என் பதை உளநூல் விளக்குகிறது. இதற்கு வேறு உதாரணம் காட்டுவானேன்? உலக இலக்கியங் களில் எளிதில் கொடுமுடி' காணவொண்ணாத இமயமலையின் 'எவரெஸ்டு' களாகத் தமிழ் இலக் கியங்கள் விளங்குகின்றன. இதற்குத் தமிழ்த் தாய்மார் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுகின்ற காலத்திலேயே 'செவிக்குணவாக' ஊட்டிய

தாய்மை இலக்கியம் காரணமாக இருக்குமெனக் கருதலாம் அல்லவா !

### இலக்கியத்தில் தாலாட்டு

நாட்டுப்பாடல் இலக்கியமாக வழங்கிவந்த இத் தாலாட்டை முதன்முதலாக இலக்கியத்தில் ஏற்றிய வர்கள் ஆழ்வார்கள். கண்ணனைக் குழந்தையாகக் கருதிப்பாடிய காரணத்தால் 'தாலாட்ட' வேண்டிய இன்றியமையாமை இவர்களுக்கு ஏற்பட்டது போலும். எனவே தாலாட்டு இலக்கியத்தில் ஏறிய காலம் கி பி. ஆரும் நூற்றுண்டாகும்.

அதன் பிறகு 'பிள்ளைத்தமிழ்' என்ற சிறுநூல் வகை தமிழ் இலக்கியத்தில் பெருகிற்று. பிள்ளைத் தமிழுக்குக் கூறப்படும் பத்துப் பருவங்களில் 'தாலப் பருவமும்' ஒன்று. அதனுல் ஒவ்வொரு பிள்ளைத் தமிழிலும் தாலாட்டு இடம் பெறுவதாயிற்று. இக் காலத் தமிழ்க் கவிஞர்கள் பலர் தாய்மை தரும் தாலாட்டின் இசை, நடை, மொழிகளையே அடிப் படையாக வைத்துக்கொண்டு நாடு, மொழி, இன வளர்ச்சியையும் வரலாற்றையும் கருத்தாகக் கொண்டு தனிக் கவிதைகள் பல புனைந்து வரு கின்றனர். இதுவே தாலாட்டின் இலக்கிய வளர்ச்சி யாகும்.

### பெண்களுக்கு

நாகரிகம் என்ற பெயரால் இந்நாட்டார் தமது மொழியையும், கலைகளையும் சிதைத்து வருகின் றனர். பெரும்பான்மையான மக்களிடம் காணப் படும் அடிமைப் புத்திதான் 'நாகரிகம்' என

அழைக்கப்படுகிறது. ஒளியும் காற்றும் அற்ற இருட்டறையில் அடைக்கப்பட்டோன் உடல்நிலை எவ்வாறு பாதிக்கப்படுமோ, அதுபோல விடுதலை உணர்ச்சியும், கல்வியுமற்ற அடிமையிருளிலே ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கிடந்துழன்ற தமிழினத்தாரின் உளநிலையும் பாதிக்கப்பட்டிருக் கிறது. காய்ச்சல் கிடந்தவனுக்கு நல்ல உணவும் கைக்குமாறுபோல, இவர்கட்கு நல்லனவெல்லாம் வெறுக்கத்தக்கனவாகப் படுகின்றன. பைத்தியம் பிடித்தவன் மருத்துவரையே அடிக்க முயலுமாப் போல, இவர்கள் நல்ல அறிஞர்களைத் தீயர் களெனத் தாக்கவும் முயலுகின்றனர். இதனால் நோயாளிகள் நிறைந்த தெருவைப்போலத்தமிழகம் குழம்பிய நிலையிற் காட்சியளிக்கிறது. முற்றும் தமிழிலே பேசுபவனைவிட ஒன்றிரண்டு ஆங்கிலம் கலந்து பேசுபவனையே மதிக்கத்தோன்றுகிறது, நமக்கு! தாய்மொழியில் நிறைய அறிவு பெற்றிருந் தும் பிறமொழிகளிற் குறைவான அறிவு பெறுதகைத ஒரு குறையாகவே கருதுகிறோம், இக்காலத்திலும்! தன்னாட்டு உடையணிந்தவனைவிட மேனாட்டு உடையணிந்தவனுக்குத்தான் மிடுக்கான நடை வருகிறது, இயல்பாக! குசராத்தியும் மராத்தியும் ஆட்சிமொழியாக்கப்பட்டு விட்டன, இந்தியோ அனைத்திந்திய மொழியாகி அரசோச்சுகிறது என் பனவெல்லாம் தெரிந்தும், நமது தாயை அரியணை யேற்றத் தயங்குகிறார்கள், நம்மினத்தவர்கள்! இதுவா நாகரிகம்? தமிழகத்துப் பெண்களும் இந்த அடிமைச் சுழலுக்கு ஆளாகிவிட்டார்கள். பெண் களைக்கண்டு ஆண்கள் ஒதுங்கிப் போகும்காலமும், காதலியைக் கண்டு காதலன் வெட்கப்படும் காலமும்

தமிழ் நாட்டிலும் வந்துவிட்டன! தமிழ் நாட்டின் மரபுவழியாக வளரும் கலைப் பெருமைகளையெல்லாம் தாய்க்குலம் இழந்து வருகிறது. இக்காலத்து நாகரிகக் கன்னிகையிடம் 'தாலாட்டு' என்றால் சிரிக்கிருள். அவளுக்குத் திரைப்படத்தில் பின்னணியோடு இசையமைத்துப் பாடும் தாலாட்டே நினைவிற்கு வருகிறது. பாட வருவதில்லை! நல்ல வேளையாகத் தாலாட்டு அனைய கலைகள் பல இன்னும் நம் நாட்டில் முற்றும் மறைந்துவிடவில்லை என்பதே நாம் பெருமைப்பட வேண்டிய செய்தியாக எஞ்சி இருக்கிறது.

இத்தொகுப்பைப் பற்றி :

தாலாட்டுப் பாக்களைச் சேர்க்கப் பெரும்பாடாகிவிட்டது. திரைப்படப் பாடல்களைப் போல் அங்கொருவரியும், இங்கொருவரியுமாக நினைவிருக்கிறதே தவிர ஒரு பாடலேனும் முழுதுமாக ஒருவர்க்கும் நினைவில்லை. கிடைத்த பகுதிகளிலும் வரிக்கு வரி சொல்லுக்குச்சொல் பாட வேறுபாடாக இருந்தன. இதற்குக் காரணம் இரண்டு(1)தாலாட்டு எழுதப்படாமல் வாய்மொழி இலக்கியமாகவே இருப்பது (2) நினைத்தபோது நினைத்தபடி பாடுமாற்றல் தாய்மார்க்கு இருப்பது. உதாரணமாக,

ஆரும் அடிக்கவில்லை ஐவிரலும் தீண்டவில்லை
ஆரும் அடிக்கவில்லை அன்னியர்கள் தீண்டவில்லை
ஆரும் அடிக்கவில்லை அயலொருவர் தீண்டவில்லை
ஆரும் அடிக்கவில்லை அங்கொருவர் தொடவுமில்லை

என்பதையும்,

தாரு அழுகின்ருன் தவத்திருல்வந்த தம்பி
தாரு அழுகின்ருன் தாயார் மடிதேடி
தாரு அழுகின்ருன் தாயின் முலைப் பாலையெண்ணி
தாரு அழுகின்ருன் தம்பி துணை வேணுமென்று

என்பதையும் காட்டலாம். இவ்வாறு குவிந்து கிடக்கும் பாட வேறுபாடுகள் கணக்கிலடங்கா. முதற்கண் நூற்றுக்கணக்கானவர்களிடம்தாலாட்டுப் பாடல்களை வாய்மொழி மூலம் வாங்கிக்கொண்டு அவற்றுள் ஒரு பொருள்பட வருவனவற்றையெல்லாம் தொடர்ச்சி பார்த்துச் சேர்த்து, பலவாகப் பிரிந்துகிடந்த பாடவேறுபாடுகளிற் சிறந்தவற்றை எடுத்துத் தொகுத்துத் தந்திருக்கிருேம். உலக வழக்காலும், கல்வியறிவின்மையாலும் சிதைவுக்கு ஆளாகிவிட்ட செந்தமிழ்ச் சொற்களுக்குச் சில இடங்களில் மட்டும் முழு வடிவங் கொடுத்துப் பதிப்பித்திருக்கிருேம். இவ்வகையில் மறைய இருந்த கலையொன்றுக்கு உருவான உயிர் கொடுத்த பெருமை உறுதியாக இத்தொகுப்பிற்கு உண்டு· கவிஞர்களின் தாலாட்டுக்களிலும் சிறந்த பகுதிகளைத் தந்திருப்பதின் மூலம், இக்கலையின் வளர்ச்சிக்கு இத்தொகுப்பு அடிகோலியிருக்கிறது.

தமிழகம் முழுதும் மூலைக்குமூலை, நாட்டுக்கு நாடு வழங்கும் நாட்டுப் பாடல்கள் கணக்கிலடங்கா. அவையனைத்தையும் சேர்த்துத் தொகுக்கும் ஆர்வத்தை, இத்தொகுப்புத் தருமாக!

தாய்மார் மறந்துவிட்ட பகுதிகளை, வரிகளை நினைவு படுத்திக்கொள்வதற்கும், தங்கட்குத் தெரியாது மறைந்து கிடந்த பகுதிகளையும் படித்துக்

கொள்வதற்கும் இத் தொகுப்பு நூல் பெரிதும் பயன் படும். நம் நாட்டின் வெவ்வேறு பகுதிகளின் தாலாட்டுக்களையும் ஒரு சேரப்படிப்பதற்கு இந்நூல் பெருந் துணையாகும். பலநிற முத்துக்களையும், மாணிக்கங்களையும் ஒன்று சேர்த்துக் காட்டும் பொன் மாலைபோலத் தமிழகம் முழுதும் ஊடாடி நிற்கும் நாகரிக ஒருமையைத் தாலாட்டு விளக்கு கிறது. இத்தகைய பயனனைத்தும் அறிந்து இத் தொகுப்பைப் படிக்குமாறு பெண்மக்களையும் பிறரையும் வேண்டுகிறோம்.

தமிழண்ணல்

# காணிக்கை !

மனித இனவளர்ச்சி உள்ளவரை, தாயும் சேயும் என்ற உறவு இருக்கும்; இவ்வுறவுள்ள வரை இத்தாய்மை இலக்கியமும் நிலைபெற்று விளங்கும். இவ்வாறு அழியாப் புகழும், இயற்கை எழிலும், இயல்புணர்ச்சியும் அடித் தளமாகக் கொண்ட இத் தாலாட்டுத் தொகுப்பை - தாய்மை இலக்கியத்தை - சேய்களின் நல்வாழ்வே சிந்தனையாய் உயிர்வாழும், தாயன்பின் தாள்வைத்துத் தலை தாழ்த்தி வணங்குகிறோம் !

தமிழண்ணல்

# பாண்டிய நாடு

## இராமனாதபுரம் மதுரை மாவட்டங்கள்




இன்னார் மகனோ
இனியார் மருமகனோ?
தனதாய் விளையாடும்
தமிழோ புனக்கிளியோ?

[பக் - 38

## ஆரடித்தார்?   ஏனழுதாய்?

ஆரடித்தார் ஏனழுதாய்
அடித்தாரைச் சொல்லியழு!
கண்ணேஎன் கண்மணியே,
கடிந்தாரைச் சொல்லியழு!

விளக்கிலிட்ட வெண்ணெயைப்போல்
வெந்துருகி நிற்கையிலே
கலத்திலிட்ட சோறதுபோல்
கண்கலக்கந் தீர்த்தாயே!

கொம்புக் கனியே
கோதுபடா மாங்கனியே!
வம்புக் கழுதாயோ
வாயெல்லாம் பால்வடிய!

மாமன் அடித்தானோ
மல்லிகைப்பூச் செண்டாலே!
அத்தை அடித்தாளோ
அல்லிமலர்ச் செண்டாலே!

அடித்தாரைச் சொல்லியழு
ஆக்கினைகள் செய்துவைப்போம்
தொட்டாரைச் சொல்லியழு
தோள்விலங்கு போட்டுவைப்போம்

வெண்ணெயால் விலங்குபண்ணி
வெய்யிலிலே போட்டுவைப்போம்!
மண்ணால் விலங்குபண்ணித்
தண்ணீரில் போட்டுவைப்போம்! [1]

### ஏனழுதான், என்னரியான்?

ஏனழுதான் [2] என்னரியான்,
ஏலம்பூ வாய்நோக!
கரும்புக் கழுதானோ
கண்ணிலிட்ட மைகரைய!
சிலம்புக் கழுதானோ
செங்கமல வாய்சிவக்க!

மண்ணிலொரு புன்னைமரம்
வருசமொரு பூப்பூக்கும்
வருந்திஒரு காய்காய்க்கும்
என்னரியான் புன்னைமரம்
ரப்

புன்னைப்பூக் கொய்யவந்த
புலந்திரனை யாரடித்தார்?
மகிழம்பூக் கொய்யவந்த
மகனாரை யாரடித்தார்?

இதனைத் தமிழகத்தின் தாலாட்டு என்றுசொல்லலாம்; தமிழ்வழங்கும் இடமெல்லாம் இத்தாலாட்டு, சிறுசிறு வேறுபாடுகளோடு வழங்கப்படுகிறது.

என் அருமைமகன் என்பது பொருள்:
"உன்னற்கு அரியான்" -திருவாசகம். "அரியானை அந்தணர்தம் சிந்தையானை" -தேவாரம்.

இலைகட்கு இடமில்லாமல் பிஞ்சுகள் பெருகிவிட்டன.

1 "ஆரும் அடிக்கவில்லே
ஐவிரலும் தீண்டவில்லே,
தாஞ அழுகின்ருன்
தம்பிதுணே வேணுமென்று!
அவஞ அழுகின்ருன்
ஆத்தாள் மடிதேடி!"

### தென்றல் வந்தும் வீசாதா?

தெற்கே மழை பொழியத்
தென்புறமாய்க் காற்றடிக்கத்
தென் மதுரை மீஞள்
சேங்கைக்கே தண்ணீர்வர
சேங்கை மணலொதுக்கித்
தென்னே புன்னே உண்டுபண்ணி
தென்னே குலே நெருங்கிச்
செண்பகப்பூத் தான்மலர்ந்து
தென்னே வந்தும் வீசாதா
தென்காற் றடியாதா
செல்வமகன் கண்ணயர!

வடக்கே மழைபொழிய
வடபுறமாய்க் காற்றடிக்க
வாழ்மதுரை மீஞள்
வைகைக்கே தண்ணீர்வர
வைகை மணலொதுக்கி
வாழைபுன்னே உண்டுபண்ணி

1 தாயின் கேள்விக்கு, பிறர் கூறும் பதிலாக இவ்வரிகள் அமைந்துள்ளன.

வாழை குலைநெருங்கி
மல்லிகைப்பூத் தான்மலர்ந்து
[1] வாழைவந்தும் வீசாதா
வளர்காற்றடியாதா
வாழும் மகன் கண்ணயர!

வா பசுவே!

மலைமேல் பசுமேய—என் கண்ணே
மகிழமணி ஓசையிட
செடிமேல் பசுமேய—என் கண்ணே
செல்லமணி ஓசையிட
அந்திபட்டால் வாபசுவே!—என்
அருமைமகன் பால்குடிக்க
பொழுதுபட்டால் வாபசுவே!—என்
பொன்னுமகன் பால்குடிக்க

காடெல்லாம் தேடிக்
காராம் பசுவோட்டி,
ஓட்டிவந்த பாற்பசுக்கு
உடம்பெல்லாம் பொன்னிறமாம்
கொண்டுவந்த பாற்பசுக்குக்
கொம்பெல்லாம் பொன்னிறமாம்

உட்கார்ந்து பால்கறக்க
முக்காலி பொன்னாலே
அணைந்துபால் கறப்பதற்கு
அணைகயிறும் பொன்னாலே
பிடித்துப்பால் கறப்பதற்குப்
பிடிசெம்பும் பொன்னாலே

1 தென்னங் கீற்றிடையேயும் வாழை இலையூடும் தவழ்ந்துவரும் தென்றல்.

தென்கடல் மாணிக்கம்
    திரட்டி அடுப்பாக்கி
வடகடல் மாணிக்கம்
    வாரி உமிபரப்பி

நெய்ப்பவழம் போல் நடுவே
    நிமிரும் தணல் வளர்த்து
வானத்தைப் பார்த்து
    வளரும் பிறைபார்த்து
சங்கு கழுவித்
    [1] தளிகையிலே பாலாற்றி
சங்குப்பால் குடித்திடுவாய்—என் கண்ணே
    உங்கள் குலம் பேர்சொல்ல!
பால்குடித்துக் கண்வளராய்—என் கண்ணே
    பாட்டன் குலம் பேர்சொல்ல!

### தந்தை

தெள்ளு தமிழ்வளர்த்த
    தென்னவராம் பாண்டியர்க்குப்
பிள்ளைக் கலிதீர்த்த
    பெருமானும் நீதானே?
மாம்பழத்தைக் கீறி
    வயலுக்கு உரம்போட்டுத்
தேன்பாய்ந்து நெல்விளையும்
    செல்வமுளளார் புத்திரனே!
வெள்ளித்தேர் பூட்டி
    மேகம்போல் மாடுகட்டி
அள்ளிப் படியளக்கும்
    அதிட்டமுள்ளார் புத்திரனே!

1 உண் கலம்

வாரிப் படியளக்கும்
 மகிமையுள்ளோர் புத்திரனோ !
சேற்றிலொரு செங்கழுநீர்
 திங்களொரு பூப்பூக்கும்
நூற்றிலொரு பூவெடுத்து
 முடிப்பார் மகனோரோ !

மதுரை இருகாதம்[1]
 வாழ்மதுரை முக்காதம்
' ஐம்பத்தாறு தேசம் '
 ஆளவந்த சீமானோ !
பாட்டனு ராண்ட
 ' பதினெட்டு ராச்சியமும் '
நாட்டமுட னுளவந்த
 ராசகுல நாயகமோ !

வெள்ளி வளைபூட்டி
 விசாலமாய்த் தொட்டிகட்டித்
தங்க வளைபூட்டிச்
 [2] சதுர அலங்காய்த் தொட்டிகட்டிப்
பச்சை இலுப்பைவெட்டிப்
 பால்வடியத் தொட்டிகட்டி
தொட்டியிலே அட்டணக்கால்
 தூங்குறது யாருமகன் ?
[3] இன்னார் மகனோ
 இனியார் மருமகனோ ?

1 காதம் - பத்துக்கல் தொலைவு.

2 சதுர அலங்காய் - சதுர வடிவாக (அலங்கல்-ஒழுங்கு)

3 இன்னார் - இத்தன்மையினை உடையவர் என்று உலகத்தாரால் குறித்துப் புகழப்படுபவர். " இன்னான் எனப் படும் சொல் " - குறள் (453)

தனதாய் விளையாடும்
 தமிழோ [1] புனக்கிளியோ?
பொதுவாய் விளையாடும்
 புள்ளிமான் நித்திரையோ!

### ஐயா

முல்லைப்பூக் கட்டடமாம்
முகப்பெல்லாம் உத்திரமாம்
முகப்பைத் திறந்துவிட்டால்
முல்லைப்பூ வாசனையாம்
முல்லைப்பூ வாசனையாம்!
உங்கள் ஐயா மூத்தவர்கள் யோசனையாம்!

ஆராயிரவர்க்கும்
 அறியவந்த பார்ப்பார்க்கும்
காரியமுஞ் சொல்லிக்
 கணக்குரைப்பார் [2] பேரனே!

[3] பரட்டைப் புளியமரம்
 பந்தடிக்கும் நந்தவனம்
நந்தவனம் கண்திறந்து
 நாலுவகைப் பூவெடுத்து
பூவெடுத்துப் பூசைசெய்யும்
 புண்ணியவார் பேரனே

---

1 புனக்கிளி—தினைப்புனத்தில் விளையாடுங் கிளி.

2 பேரனே என்று வருமிடங்களில் பெண் குழந்தையாக இருந்தால் பேர்த்தியோ என மாற்றிப்பாடுகிறாள் தாய்.

3 பரட்டை - பரந்து கிளை விரிந்த.

மலரெடுத்துப் [1] பூசைசெய்யும்
மகராசர் பேரனே
அரும்பெடுத்துப் பூசைசெய்யும்
அருச்சுனவார் பேரனே!

வாழை இலைபரப்பி
வந்தாரைக் கையமர்த்தி
வருந்தி விருந்துவைக்கும்
மகராசர் பெயரனே?
[2] தென்னை இலைபரப்பிச்
சென்றோரைக் கையமர்த்தித்
தேடி விருந்துவைக்கும்
[3] திசைக்கருணர் [4] பெயரனே!

அம்மான்

கற்பகத்தைத் தேடிக்
கனிந்து வரும்பொழுது
உன் அரிய அம்மான்மார்
என்னகொண்டு வந்தார்கள்?

1 பூ+செய். பூசெய். பூசை என மருவியது. 'பூப் பலி செய்ம்மின்' எனவரூஉம் சிலப்பதிகாரத்தால் அறிக.

2 தென்னை இலையை ஓரளவாக நறுக்கித் தைத்து உண்ணப் பயன்படுத்துதல் இந்நாட்டு மரபு.

3 எல்லாத் திசைகளிலும் தம் கருணையைச் செலுத்துபவர்.

4 பெயரன், பெயர்த்தி என்ற பெயர்கள் பேரன் பேத்தி என மருவின. பெயரன் என்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் வந்துள்ளது. "மேதக்க எந்தை பெயரனை யாம் கொள்வேம்" (கலித் தொகை 81)

கொத்துவிடா [1] நெத்தும்
    தோதுபடா மாங்கனியும்
கோடைப் பலாச்சுளேயும்
    குலேசேர்ந்த மாங்கனியும்
பருவப் பலாச்சுளேயும்
    பக்குவத்து மாங்கனியும்
[2] அக்கரையில் சர்க்கரையும்
    அதிமதுரத் தென்னவட்டும்
காய்ச்சிய பாலும்
    கற்கண்டும் செந்தேனும்

ஏலங் கிராம்பும்
    இளங்கொடிக்கால் வெற்றிலேயும்
சாதிக் களிப்பாக்கும்
    சங்குவெள்ளேச் சுண்ணும்பும்
அத்தனேயும் கொண்டுன்னே
    [3] அறியவந்தார் அம்மான்மார்
கனிவருக்கம் கொண்டுன்னேக்
    காணவந்தார் அம்மான்மார்!
பழவருக்கம் கொண்டுன்னேப்
    பார்க்கவந்தார் அம்மான்மார்! [4]

1 நெற்று என்பது நெத்து எனவந்தது. "வாடல் உழிஞ்சில் அம் நெற்று" (அகநானூறு)
2 வெளிநாட்டுச் சர்க்கரைபோலும்!
3 அறிய வருதல்-பார்க்க வருதல். "மாப்பிள்ளே அறிய வருதல்"-செட்டிநாட்டுத் திருமணச் சடங்குகளில் ஒன்று.
4 அம்மான்மார் பலராஞல் இவ்வாறு பாடுவாள் தாய். அம்மான் ஒருவரேயாஞல் அக்குழந்தையின் தாய் 'அம்மாஞர்' என்று உயர்வுப்பன்மை கொடுத்துப் பாடிவிடுவாள்.

போட்டு விளையாடப் பொன்னாலே அம்மானை
வைத்து விளையாட வண்ணக் கிலுகிலுப்பை
கட்டி விளையாடக் காசிச் சிண்டுமணி
ஓட்டி விளையாட ஒயிலா ரயில்வண்டி
நெத்திக்குச் சுட்டி நிழல்பார்க்கக் கண்ணாடி
காலுக்குத் தண்டை கைக்குக் கணையாழி
கொண்டுவந்துங் காண்பார்கள் கோதைகிளிக்
கம்மான்மார்!

சங்கினால் பால்கொடுத்தால்
[1]சந்தணர்வாய் நோகுமென்று
தங்கத்தினால் சங்குசெய்து
தருவார்கள் தாய்மாமன்!
அத்தை மடிமேலும்
அம்மான்மார் தோள்மேலும்
வைத்து விளையாடும்
மாமணியே கண்வளராய்!
அம்மான் அரண்மனைக்கு
அமைந்த மருமகனே
மாமன் அரண்மனைக்கு
வாய்த்த மருமகனே?

ஆனைகட்டிப் போரடிக்கும்
அம்மானார் சேனைதளம்
குதிரைகட்டிப் போரடிக்கும்,
கோடிப்பேர் சேனைதளம்
மான்கட்டிப் போரடிக்கும்
மாமுடிமார் சேனைதளம்

[1] சந்தண நிறத்துக் குழந்தை.

அம்மானார் [1] செய்களிலே
    [2] அவலுக்கொரு நெல்லெடுத்துப்
பள்ளிதனைக் கூட்டிப்
    பதம்போல் அவலிடித்து
இடைச்சிதனைக் கூட்டி
    இலைபோல் அவலிடித்து
அவல்அழகைக் கண்டதம்பி-நீ
    அழகை அமர்ந்தாயோ ?

தாய்மாமன் எல்லையிலே...

காடுவெட்டி [3] நாடாக்கிக்
    கற்களெல்லாம் உள்ளழுத்தி
நாடுபெற்று வாரார்கள்
    ராசமுடி அய்யாக்கள் !
சீமைபெற்று வாரார்கள்
    செல்லமுடி அம்மான்மார் !
அம்மானார் எல்லையிலே
    என்னவைத்தால் தோப்பாகும் ?

வைத்த பயிர்வளரும்
    வாழைவைத்தால் தோப்பாகும் !
சேர்த்த பயிர்வளரும்
    தென்னைவைத்தால் தோப்பாகும் !

1 செய்-வயல்.
2 அவலுக்கு ஒரு நெல்-அவலுக்கு ஏற்ற ஒருவகை நெல்.
3 செட்டிநாட்டார் வளமிகுந்த சோழநாட்டிலிருந்து வளமற்ற இராமஸ்ரீதபுர மாவட்டப் பகுதியில் பாண்டிய மன்னன் அனுமதியுடன் குடியேறியவர்கள். 'காடு வெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி, வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேள்வணிகர்'-என்பது பாடுவார் முத்தப்ப செட்டியார் பாடல்.

தொட்ட இடம்துலங்கும்
    தோட்டம் பயிராகும்!
தென்னையும் வாழையும்
    சேர்த்துவைத்தால் தோப்பாகும்!
வாழையும் தென்னையும்
    வாங்கிவைத்தால் தோப்பாகும்!
இஞ்சி பயிராகும்
    எலுமிச்சை தோப்பாகும்

மஞ்சள் பயிராகும்
    மாதுளையும் தோப்பாகும்
கொத்திஞ்சி காய்க்கும்
    கொடிமிளகு
ஏலக்காய் காய்க்கும்
    இருநூறு
சாதிக்காய் காய்க்கும்
    தாய்மாமன் எல்லையிலே!

## சீராட்டும் பாராட்டும்

### பூச்சரமோ!

கண்ணில் உறுமணியோ—எங்கள்
    கலிதீர்த்த பெட்டகமோ!
பொன்னில் உறுமொளியோ
    பூவிலுறும் வாசனையோ!
கொடிக்கால் மருக்கொழுந்தோ
    கோதைகையில் பூச்சரமோ!

### தாமரைப்பூ!

ஏழுகடல் நீந்தி
எடுத்துவந்த தாமரைப்பூ!
பத்துக் கடல்நீந்திப்
பறித்துவந்த தாமரைப்பூ!
அணைத்து மனம்மகிழ—நாங்கள்
அள்ளிவந்த தாமரைப்பூ!
கொஞ்சி மனம்மகிழ—நாங்கள்
கொண்டுவந்த தாமரைப்பூ!

### பாண்டிப் பெருமுத்தோ!

ஆயிரம் முத்திலே—என்கண்ணே நீ
ஆராய்ந்தெடுத்த முத்தோ!
தொண்ணூறு முத்திலே—என் கண்ணே நீ
துணிந்தெடுத்த ஆணிமுத்தோ!
வைகை பெருகிவர
வார்ந்தமணல் ஊர்ந்துவர
ஊறிவந்த தண்ணியிலே
ஒட்டிவந்த கட்டிமுத்தோ
பெருகிவந்த தண்ணியிலே
பின்னணைந்த சந்தணமோ!
சந்தணமோ [1] என்பொருளோ
சாமிதந்த தவப்பயனோ
கொட்டிவைத்த முத்தோ
குவித்தநவ ரத்தினமோ!
கட்டிக் கரும்போ
காணிக்கை ஆணிமுத்தோ
முத்தில் ஒரு முத்தோ
முதிர விளைந்த முத்தோ

1 ‘தம் பொருளென்ப தம் மக்கள்’—திருக்குறள் (63)

தேற விளைந்த முத்தோ
  தில்லைக் குகந்த முத்தோ
பாண்டிப் பெருமுத்தோ
  பாட்டன்மார் ஆண்டமுத்தோ
ஆணிப் பெருமுத்தோ
  ஐயாக்கள் ஆண்டமுத்தோ
முத்துமுத்தும் கடலுக்குள்ளே
  மூணுத்துப் பாய்ச்சலிலே
முக்குளித்து முத்தெடுக்கும்
  முத்துமகன் நித்திரையோ!

சோதிச் சுடரொளியோ!

மாசில்லா முத்தோ
  மணிவயிரத் தோளானே!
கல்விக் களஞ்சியமோ
  கற்றோர்க்குத் தாயகமோ!
செல்வத் திருவிளக்கோ
  செம்பொன் சுடரொளியோ
ஆதி அருள்விளக்கோ
  ஆனந்தப் பேரொளியோ
தூண்டா மணிவிளக்கோ
  [1] சோதிச் சுடரொளியோ!
மாணிக்கத் தூணே
  மணிவயிரப் பூமுடியோ,
வானத்தின் மீனே
  மேகத்தின் மின்னொளியோ!

1 'சோதியே சுடரே சூழ்ஒளி விளக்கே!'
—மணிவாசகர்

தம்பிதுணை ஆனவனே!

மானுடா ஓடுது
    மறியடா நல்லதம்பி!
மானோடும் வீதி எல்லாம்
    தானோடித் திரிந்தாயோ?
ஓடித் திரிந்தாயோ
    ஒருகால் சிலம்புதிர!
தேடித் திரிந்தாயோ
    திருக்கால் முத்துதிர!

நாழிச் சிறு சலங்கை
    நல்லபவன் பொற்சலங்கை
உழக்குச் சிறுசலங்கை
    ஒசத்தியுள்ள பொற்சலங்கை
ஆருக்கு இடுவ மென்று
    தேடித் திரிகையிலே
எனக்கிடுங்கள் என்றுசொல்லி
    எதிர்கொண்டு வந்தவனே!
தனக்கிடுங்கள் என்று சொல்லித்
    தம்பிதுணை ஆனவனே!

மீன் பூக்க நிலவெரிக்க
    மின்னல் குளம் பெருக
மின்னலிலே காதவழி - தம்பிநீ
    விளையாடி வந்தாயோ!
[1]அச்சடிக்கப் பொன்விளைய
    ஆதிச்சார் உன்னுடு
வைத்திருக்கத் தந்தமகன்
    வாழுவான் நூறுகுடி

1 அச்சடிக்க - செய்வரம்பு கட்ட (அச்சுக்கட்டின நிலம்)

குடகு சிறுமலையாம்
கண்ணியவான் ஆடுமலை
அரிசித்தினைவிளையும் நீபிறந்த
அண்ணா மலைநாடு
நெய்ப்பவழக் காய் [1]தறுக்கும்
உனதுதல வாசலிலே!

## தேடிப் பிறந்த செல்வம்

[2]சீரங்கம் ஆடித் திருப்பாற் கடலாடி
மாமாங்கம் ஆடி மதுரைக் கடலாடி
சங்குமுகமாடிச் சாயா வனம் பார்த்து
முக்குளமும் ஆடி முத்திபெற்று வந்தகண்ணே!
திங்கள் தனைப்பணிந்து திருக்கேச் சுரம்ஆடி
தைப்பூசம் ஆடித் தவம்பெற்று வந்தகண்ணே!

காணிக்கை நேர்ந்தேன்
கைநிறைந்த பொன்னேர்ந்தேன்
மாணிக்கம் நேர்ந்தேன்
மணிக்குழந்தை வேணுமென்று!

வாடிய நாளெல்லாம் வருந்தித் தவமிருந்து
தேடிய நாள்தன்னில் செல்வமாய் வந்தகண்ணே!
மலடிமலடியென்று வையகத்தார் ஏசாமல்
மலடியென்ற சொல்லை மாற்றப் பிறந்தாயோ!

1 தறுக்கும் - தடைசெய்யும்.

2 இப்பாடற் பகுதியில் பல ஈழநாட்டிலும் வழங்குகின்றன.

[1]'ஏலங் குழலா'னுக் கென்னென்ன ஆலத்தி
ஆலத்தி சுற்றுங்கள் அரிய குமாரனுக்கு!
சுற்றுங்கள் ஆலத்தி 'சோழ குமாரனுக்கு!'

இரும்பாலே ஊருணியாம்
இருபுறமும் தாமரையாம்!
தாமரையின் நூலெடுத்துத்
தனிப்பசுவின் நெய்யுருக்கி
வாழை'லேயும் மாவிளக்கும்
வைத்தெடுத்த [2]குஞ்சலரோ!
தென்னி'லேயும் மாவிளக்கும்
சேர்த்தெடுத்த குஞ்சலரோ!
குஞ்சலரோ அஞ்சலரோ!
ஆடும் சிதம்பரரோ!

### எங்கிருந்தாய்?

சின்னஞ் சிறுகிளியே தினைகொய்ய வந்தாயோ?
பச்சைச் சிறுகிளியே பழந்தின்ன வந்தாயோ
எங்கிருந்தாய் இந்நேரம் இளங்கிளியே சொல்லிடுவாய்?
பரமசிவன் முன்பாகப் பாதத்தின் கீழிருந்தேன்!
சின்னஞ் சிறுகிளியே விடிகாலம் எங்கிருந்தாய்?
தென்மதுரைச் சொக்கர் திருவடியின் கீழிருந்தேன்!
மஞ்சட் சிறுகிளியே மதியம்போல் எங்கிருந்தாய்?
மலைப்பழனி வேலவர்தம் மண்டபத்தின் மேலிருந்தேன்

1 ஏலங்குழலி-மணமுள்ள கூந்தலாள் எனப் பெண்பாலை இலக்கியங்கள் சிறப்பித்துக்கூறும். இங்கே ஆண் மகவு ஏலங்குழலான் எனப்படுகிறது.

2 'குஞ்சரம்' என்பது 'குஞ்சலர்' எனத் திரிந்தது போலும்.

பறக்குஞ் சிறுகிளியே பொழுதுபட எங்கிருந்தாய்?
பொறுமையுள்ள மீனாள் பூவடியின் கீழிருந்தேன்!
கொஞ்சுஞ் சிறுகிளியே கூட்டமெல்லாம் எங்கிருந்தீர்?
குமரேசர் சன்னிதியில் கோபுரத்தின் மேலிருந்தோம்!

### உலகத்தின் உறக்கம்

உன்னுறக்கம் நீகொள்ள
உத்தமியாள் தாலாட்டச்
சாலை வழியுறங்கச்
சமுத்திரத்தின் மீனுறங்க
நாடெல்லாம் தூங்க
நடுக்கழனி [1]நெல்தூங்கப்
பாலில் பழந்தூங்கப்
பாதிநிலாத் தான்தூங்க
பொற்கொடியார் தாலாட்டப்
புத்திரனே நித்திரைசெய்!
மங்கையர்கள் தாலாட்ட
மைந்தனே நித்திரைசெய்!

## வள்ளி தாலாட்டு

### வள்ளி பிறந்தது

வள்ளி என்றால் வள்ளி
மலைமேல் படரும் வள்ளி
கொடியில் கிடந்து வள்ளி
கூவி அழும்போது
வனத்துக் குறவர்களாம்
மான்பிடிக்கும் வேடர்களாம்

1 கழனி - வயல். தாயின் தாலாட்டைக் கேட்டுக் குழந்தைமட்டுமன்றி உலகமும் உறங்குகிறதாம்.

குழந்தை குரல்கேட்டுக்
குறவேடர் ஓடிவந்து
மதலை குரல்கேட்டு
மான்வேடர் ஓடிவந்து
வாரி எடுத்து
[1] வன்ன மடியில்வைத்துத்
தூக்கி எடுத்துச்
சொர்ணமடியில் வைத்து
மண்துடைத்து மடியில்வைத்து
வள்ளியென்று பேரும்வைத்து
வடிவேல் துணையென்று
வளர்த்தார் வனந்தனிலே!

### தினைப்புனங் காவல்

காடுவெட்டித் தீக்கொளுத்தி
மேடுபள்ளம் செப்பனிட்டு
தின்னத் தினைவிதைத்து—வள்ளி
தேமொழியைக் காவல்வைத்தார்
அறுக்கத் தினைவிதைத்து—வள்ளி
அருங்கிளியைக் காவல்வைத்தார்!
[2] உழக்குத் தினைவிதைத்து—வள்ளி
ஓடிக் கிளிவிரட்டி

1. வன்ன—அழகிய

2. இப்பாடலில் உழக்கு, நாழி முதலிய அளவைப் பெயர்களை அடுக்கிப் பாட்டை அழகுபடுத்தியிருப்பது கவனிக்கத்தக்கது. ஒரு பொருளடுக்கிவரும் தாழிசை முதலிய பாவினங்களைப்போல, இவ்வாறு ஒரே பொருளைத் திரும்பத் திரும்பப் பாடுவதால் இசையினிமை பெற்றுத் தாலாட்டின் பயன் உருவாகிறது. அலை மடிந்து மடிந்து வீசுவதுபோலவும், ஊஞ்சல் சென்று சென்று மீளுவது போலவும் இவ்வரிகள் அமைந்திருப்பது குழந்தைக்கு உறக்க உணர்ச்சியை ஊட்டுவதற்கேயாகும்.

நாழித் தினைவிதைத்து—வள்ளி
நடந்து கிளிவிரட்டி
குறுணித் தினைவிதைத்து—வள்ளி
கூவிக் கிளிவிரட்டி
பதக்குத் தினைவிதைத்து—வள்ளி
பாடிக் கிளிவிரட்டி

ஆலோலம் என்றுசொல்லி—வள்ளி
அழகாய்க் கிளிவிரட்டி
அறுக்கப் பதமாச்சே—வள்ளி
அருங்கிளியாள் காத்ததினை

கதிர்வேலர் தேடிவந்தார்

சுப்பையா உன்றனுக்குத்
தோதான வள்ளியென்று
சண்முகா உன்றனுக்குச்
சரியான வள்ளியென்று
வீணைகொண்ட நாரதரும்
வேலவர்க்குச் சொல்லிவிட்டார்.

தினைப்புனமுங்காத்து—வள்ளி
திகைத்துநிற்கும் வேளையிலே
வனத்திருக்கும் வேடரைப்போல்—சுப்பையா
வந்தாராம் மாலையிட
தேனுந் தினைமாவும்
தெவிட்டாத வேலவரும்
பாலுந் தினைமாவும் பசியார
வந்தாராம் வள்ளியிடம்!

புள்ளிமான் புகுந்ததென்று—சுப்பையா
புகுந்தார் தினைப்புனத்தே
வள்ளிமான் வந்ததென்று—சுப்பையா
வந்தார் வனத்தினிலே!

வெள்ளிமலை தெற்கே
விறலிமலை தென்மேற்கே
கல்லுமலைக் குள்ளிருந்து
கதிர்வேலர் ஓடிவந்து
வள்ளிதனை மாலையிட
வந்தார் வனத்தருகே!

குறவேடம் கொண்டார்

வண்டாடப் பூமலர—வள்ளி
வனங்காக்கக் கண்டாரோ ?
வள்ளி அழகுக்கும்—வள்ளி
வலதுகைத் [1] தேமலுக்கும்
[2] கன்னத்து மஞ்சளுக்கும்—சுப்பையா
கண்டாசை கொண்டாரோ !
உட்கழுத்து மஞ்சளுக்குச்—சுப்பையா
உள்ளாசைப் பட்டாரோ !
கூந்தல் அழகுக்குச்—சுப்பையா
குறவேசம் ஆனாரோ ?
ஓடினாள் வள்ளி
ஒளிந்தாள் வனந்தேடி

1. தேமல் — சுணங்கு எனச் சங்க இலக்கியங்களில் சிறப்பிக்கப்பெறுவது இத் தேமல் அழகேயாகும்.

2. மஞ்சள் அழகே நம் நாட்டுப் பண்பாடு, மாப்பூச்சு அழகன்று !

தேடினார் வேல்முருகர்—வள்ளி
திருவடியைக் காணாமல்
வருந்தினார் முருகர்—வள்ளி
வடிவழகைக் காணாமல்

குமரன் கிழவன் ஆனான்!

நல்ல கிழவனைப்போல்—சுப்பையா
நடித்தாராம் தினைப்புனத்தில்
மெத்தப் பசிக்குதென்று—சுப்பையா
வித்தைமெத்தச் செய்தாராம்!
தேனுந் தினைமாவும்—வள்ளி
சேர்த்துக் கொடுத்தாளாம்
தாக மெடுக்குதென்று—சுப்பையா
சாலங்கள் செய்தாராம்!
தேன்குடிக்கத் தந்தாளாம்
தேமொழியாள் வள்ளியரும்!
அதையும் குடிக்காமல்—சுப்பையா
அழைத்தாராம் சுனையருகே!
கூட்டி நடந்தாளாம்
1 கொம்பனையாள் வள்ளியரும்
ஆட்டங்கள் ஆடிச்—சுப்பையா
ஆரணங்கைக் கூவினராம்!
ஏதோ சிரமமென்று
எடுத்தணைத்தாள் தோகையவள்!
கன்னி, கை கொடுத்தாளாம்—சுப்பையா
கட்டி யணைத்தாராம்!
தோகை, கை கொடுத்தாளாம்—சுப்பையா
தோளோடணைத்தாராம்!

1. பூங்கொம்பு போன்றவள்

காட்டிலே வாழுகின்ற
    கன்னிவள்ளி நாயகிக்கு
எதைக்கண்டால் பயமென்றார்?
    ஏந்திழையாள் வள்ளியர்க்குக்
கரடிபுலி சிங்கமென்றால்
    கடுகளவும் பயமறியாள்,
ஆனையென்று சொன்னக்கால்
    அதிகப் பயமுண்டு!
கொடிபடர்ந்த வள்ளியர்க்குக்
    கொண்டுவந்தார் வெள்ளானை
காட்டானை காட்டிச்—சுப்பையா
    கலியாணம் செய்துகொண்டார்
அண்ணனைத் தானினைந்து
    ஆரணங்கை மாலைகொண்டார்!
கொண்டார் மனைவியாய்க்
    கூட்டிவந்தார் தன்னருகே!
கிள்ளு வளையலிட்டுச்—சுப்பையா
    கிளிமொழியை மாலையிட்டார்!
அடுக்கு வளையலிட்டுச்—சுப்பையா
    ஆரணங்கை மாலையிட்டார்!
பச்சை வளையலிட்டுச்—சுப்பையா
    பசுங்கிளியை மாலையிட்டார்.

## சொக்கரும் மீனளும்

உழவு

மதுரைக்கும் நேர்கிழக்கே
    மழைபெய்யாக் கானலிலே
வெள்ளிக் கலப்பைகொண்டு—சொக்கர்
    விடிகாலம் ஏர்பூட்டித்
தங்கக் கலப்பைகொண்டு—சொக்கர்
    தரிசுழுகப் போனாராம்!

### விதைபாவி நீர்பாய்ச்சல்

வாரி விதைபாவி
வைகைநதித் தீர்த்தம்வந்து
அள்ளி விதைபாவி
அழகர்மலைத் தீர்த்தம்வந்து
பிடித்து விதைபாவிப்
பெருங்கடலில் தீர்த்தம்வந்து
எங்கும் விதைபாவி
ஏழுகடல் தீர்த்தம்வந்து

### நாற்று நடுதல்

முத்து விதைபாவி
மிளகுச்சம்பா நாத்துநட்டுப்
பவழக் குடைபிடித்துச்—சொக்கர்
பயிர்பார்க்கப் போகையிலே
வங்காளஞ் சிட்டு
வயலிறங்கி மேய்ந்ததென்று
சிங்கார வில்லெடுத்துத்
தெறித்தாராம் அம்பினாலே!

### நெல் விளைவு

ஊசிபோல் நெல்விளையும்
ஒருபுறமாய்ப் போரேறும்
பாசிபோல் நெல்விளையும்
பட்டணம்போற் போரேறும்
சரஞ்சரமாய் நெல்விளையும்
சன்னிதிபோற் போரேறும்
கொத்துக்கொத்தாய் நெல்விளையும்
கோபுரம்போற் போரேறும்

கட்டுக் கலங்காணும்
கதிருழக்கு நெற்காணும்
அடித்துப் பொலிதூர்த்த
அதுவும் கலங்காணும்!
மூன்றுகலங் காணுமென்று—சொக்கர்
[1] முத்திரிக்கை அடிச்சாரோ!

சோறுக்கல்

அடுப்பு மெழுகி
ஐவிரலால் கோலமிட்டுப்
பானை கழுவிப்
பன்னீரால் உலைவைத்துத்
தங்க நெருப்பெடுத்துத்
தனிநெருப்பு உண்டுபண்ணிப்
பொன்போல் நெருப்பெடுத்து—மதுரைமீனாள்
பொறிபறக்க ஊதிவிட்டாள்!

உழவனும் உழத்தியும்

சம்பாக் கதிரடித்துச்—சொக்கர்
தவித்துநிற்கும் வேளையிலே
வேரில்லாக் கொடிபிடுங்கி—மதுரை மீனாள்
தூரில்லாக் கூடைசெய்து
கூடையிலே சோறெடுத்துக்
குடலையிலே காயெடுத்துச்
சோலைக் கிளிபோல—மதுரை மீனாள்
சோறுகொண்டு போனாளாம்!
நேரமாச்சு தென்று—சொக்கர்
நெல்லால் எறிந்தாராம்

1 முத்திரை அதாவது இலச்சினை.

கலத்திலிட்ட சோறுதனிற்
கல்லோ கிடந்ததென்று—சொக்கர்
கடுங்கோபம் கொண்டாராம்!
வாரி எறிந்தாராம்—சொக்கர்
வயிரமணிக் கையாலே
சோர்ந்து படுத்தாளாம்—மீனாள்
சொக்கட்டங்காய் மெத்தையிலே
மயங்கி விழுந்தாளாம்
மல்லிகைப்பூ மெத்தையிலே!
ஏந்தி எடுத்தாராம்—சொக்கர்
இடதுபுறம் தோளணைய!
வாரி எடுத்தாராம்—சொக்கர்
வலதுபுறம் தோளணைய!

### அண்ணன் கொடுத்த சீர்

அழுத குரல்கேட்டு
அழகர் எழுந்திருந்து
வரிசை கொடுத்தாராம்
வையகத்தில் உள்ளமட்டும்
சீரு கொடுத்தாராம்
சீமையிலே உள்ளமட்டும்
மானா மதுரைவிட்டார்
மதுரையிலே பாதிவிட்டார்
தல்லாகுளமும் விட்டார்
தங்கச்சி மீனாளுக்குத்
[1] தளிகையிலே பாதிவிட்டார்!

தளிகை—கடவுளர்க்குப் படைக்கப்பெறும் உணவைக் குறிக்கும். இங்கே அவ்வுணவுப் பொருள்விளையும் வயல்களைச்

காப்பு

தங்கம் நறுக்கித்
    [1] தமருவட்டத் தூண்நிறுத்தி
வெள்ளி வளைபூட்டி
    மேகவண்ணத் தொட்டிகட்டிக்
காசியிலே பட்டெடுத்துக்
    கப்பலைப்போல் தொட்டிகட்டித்
தொட்டி வரிந்துகட்டித்
    துரைமகனைப் போட்டாட்டி
ஆட்டினார் சொக்கலிங்கம்
    அயர்வு வரும்வரையில்
ஊட்டினார் பாலமிழ்தம்
    உறக்கம் வரும்வரையில்
கட்டிலுக்குங் கீழே
    காத்திருப்பாள் மீனாளும்!
தொட்டிலுக்குங் கீழே
    துணையிருப்பார் சொக்கலிங்கம்!

## பழங்குடி மக்கள் தாலாட்டு

ஆரீரோ ஆரீரோ என்கண்ணம்மா ஆரீரோ
    முத்திடிச்சு மாக்கொழிச்சு—கண்ணம்மா
        முற்றமெல்லாம் கோலமிட்டு
    கோலம் அழியாமல்—கண்ணம்மா
        கும்பிடடி கோலவல்லி
    வள்ளியென்றால் வள்ளி
        மலைமேல் படரும்வள்ளி
    கொடிபடர்ந்த வள்ளியர்க்குத்
        துணைபடர வந்தாயோ ?

---

1. துளையிட்டுப் பொருத்தப்பெறும் வட்ட வடிவமான தூண்.

கரும்புருகத் தேனுருகக்
கண்டார் மனமுருக
[1]எலும்புருகப் பெற்றகண்ணே!
இலஞ்சியமே கண்வளராய்!
அழுதா அரும்புதிரும்
அண்ணாந்தால் பொன்னுதிரும்
சிரிச்சா சிறுமுத்துதிரும் - செல்வமகன்
வாய்திறந்தால் தேன்சிதறும்!
தேனோ திரவியமோ - என் கண்ணே
தெவிட்டாத மாங்கனியோ!

என் கண்ணம்மா!
[2] அவரை சலசலங்க அம்புமணிப் பிஞ்சிறங்க
கொடியவரை காய்காய்க்கக் குடிதழைக்க வந்தமகன்!
பச்சை இலுப்பைவெட்டிப் பால்வழியத்தொட்டிகட்டி
அந்தநல்ல தொட்டியிலே - என் கண்ணம்மா
ஆளவந்த பாலகனோ!

ஆட்டுங்கடி தாதியரே!
அன்னக்கிளி கண்ணுறங்க!
ஊட்டுங்கடி பாலை
உத்தமியே! தாதியரே!
தொட்டிலுக்குங் கீழே - என் கண்ணம்மா
துணையிருப்பாள் மாரியம்மாள்
கட்டிலுக்குங் கீழே - என் கண்ணம்மா
காத்திருப்பாள் காளியம்மாள்

1 இவ்வரி நாஞ்சிற் பகுதியிலும் ஒலிக்கிறது.

2 அவரை சலசலங்க அம்புமணிக் காய்காய்க்கக் கொடியவரை பிஞ்சுவிடக் குடிதழைக்க வந்த மகன் என்றும் பாடம்.

ஏலம் சிறிதோ - என் கண்ணம்மா
 இலேசிறிதோ காய்சிறிதோ ?
பாலன் சிறிதோ - என் கண்ணம்மா
 கிடைக்குமோ பஞ்சவர்க்கு !

சந்திரரோ உன்தகப்பன்
 சூரியரோ உன்மாமன்
சந்திரர்க்கும் சூரியர்க்கும்
 சலிப்பாத்த வந்தகண்ணே !
[1] வெள்ளியோ உன்தகப்பன்
 வேந்தரோ உன்மாமன்
வெள்ளிக்கும் வேந்தர்க்கும்
 [2] விளையாத்த வந்தகண்ணே !

கரும்போ இனிதேனே
 கற்கண்டோ சர்க்கரையோ !
சர்க்கரையோ முக்கனியோ !
 சாதி மருக்கொழுந்தோ !
கொடிக்கால் மருக்கொழுந்தோ—கண்ணம்மா
 கோதைகையிற் பூச்சரமோ !
சாதி மருக்கொழுந்தோ—கண்ணம்மா
 சரங்கொடுத்த பூச்சரமோ !

பாளையத்து ராசனே நீ
ஆராரோ ஆரிரரோ—என்கண்ணே நீ
 ஆராரோ ஆரிரரோ !
தூங்கடா என்நல்ல கண்ணே—என்
 கண்ணே துணையடா, நித்திரை போ !

1 வெள்ளி—சுக்கிரன் ;'வெள்ளி ஓடாது' என்பது போல வும் 'விளையே ஆடவர்க்கு உயிரே' என்பது போலவும் வெள்ளி, விளை என்ற சொற்கள் சங்க இலக்கியத்தில் இதே பொருளில் வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

2 பதிலாக வேலேபார்க்க.

நித்திரையும் போகாயோ—என்கண்ணே நீ
சித்திரப்பூந் தொட்டிலிலே!
தூங்காத கண்ணுக்கு—என்கண்ணே
உனக்குத் துரும்புகொண்டு மையெழுதி
மையெழுதிப் பொட்டுமிட்டு—என்கண்ணே
மனம் மகிழ்ந்து நீதூங்காய்!
வானத்து மீனோ—என்செல்வக்கிளியே நீ
வளரும் இளம்பிறையோ—நீ
வனக் குருவி போலவந்து—என்
மனக்கவலை தீர்த்தாயோ!
கடல் அரசு, பவழமலை—என்கண்ணே
உனக்குக் கண்காணு ராச்சியங்கள்
உனக்கு, நிலையரசு வேண்டுமென்று—என்கண்ணே நீ
நின்று தவம் செய்தனையோ!
பாலாறு, நெய்யாறு—கண்ணேஉனக்குப்
1 பாலும் பசியாறு!
பாலாற்றுத் தண்ணியிலே—என்கண்ணே
பசியாறி வந்தனையோ!
கரும்போ கலகலங்க—என்கண்ணே
உனக்குக் கல்லாறும் தண்ணிவர,
கரும்பு நட்டகொல்லையிலே—என்கண்ணே நீ
விரும்பிநட்ட செங்கரும்போ!
சக்கரையோ, நெய்க்கரும்போ—என்கண்ணே
சாதிமருக்கொழுந்தோ!
மாசிமலர்ந்துவரும்—என்கண்ணே
உனக்கு, மலைமேகம் சூழ்ந்துவரும்!
2 மாசிப்பிறை கும்பிடய்ய!...என்கண்ணே
மாமன்கிளை வாழவென்றே!

1 சொல்நயம் காண்க. 2 மாசிப்பிறை வணங்கல் தாய் வழக்கம்; இதனைப் பிள்ளைக்கும் பழக்குகிறள்.

தைப்பிறையைக் கும்பிடய்ய !—என் கண்ணே
1 தகப்பன் கிளை ஓங்கவென்றே !

பாட்டனூர் எல்லையிலே—என் கண்ணே
உனக்கு, பட்டுவந்து நிற்குதய்யா ! உன்
பட்டுவிலைமதிக்க – என் கண்ணே
பத்துப்பேர் உன்மாமன் !
தேனோ. திரவியமோ !—என் செல்வமே
தெவிட்டாப் பலாச்சுளையோ ! என்
அன்பேஎன் ஆரமுதே
அன்னமே நீயுறங்காய் !

மயிலாடக் குயில்கூவ—என் கண்ணே
உனக்கு, மாடப்புருச்சங்கூத !
சங்கு முழங்குதையா—உனக்குச்
சந்திரனூர் கோயிலிலே!—நீ
வேண்டும் ஐயா ஆண்டவனை—என் கண்ணே உனக்கு
வேறுபிணி அண்டாது !
கும்பிடய்யா ஆண்டவனை—என் கண்ணே உனக்குக்
குற்றமொன்றும் அண்டாது !

அன்னக்கிளி போகுதடா—என் கண்ணே
தின்னக்கனி கொண்டுவர !
தின்னக்கனிபோடு—என்னையன்
திருமுடிக்கிப் பூப்போடு !

வெள்ளியாலே வாகனமாம்—என் கண்ணே
உனக்கு, வெளிவரத் தீவட்டியாம் !

1 மாமன் கிளையை முதலில் வாழ்த்தி, தகப்பன்கிளையை அடுத்துக்கூறும் தாயின் கருத்தை நோக்குக.

பொன்னாலே வாகனமாம்—என்கண்மணியே
உனக்குப் போகவரத் [1] தீவட்டியாம்!

அல்லியோ உன்தாயி—என்கண்மணியே
அருச்சுனரோ உன்தகப்பன்
தங்கத்தாலே [2] தாலி—என்கண்ணே
உனக்குத்தருவாரோ உன்மாமன்!
பொன்னாலே [3] மங்கலமாம்—என்கண்ணே
உனக்குப் போடுவார் உன்மாமன்!

வெள்ளிமலையழகா,—கண்ணே நீ
வேடர்மலை தன்னழகா!
சென்னிமலை யழகா—கண்ணே
சிவன்மலையின் தேரழகா
செட்டி மகனே நீ—என்கண்ணே
கனகசெட்டி தன்மகனே!
பார்ப்பான் மகனே நீ—என்கண்ணே
பாளையத்து ராசனே நீ!
4 கட்டப்பொம்மு போலே நீ—என்கண்ணே
கட்டழகா வாழ்ந்திருப்பாய்!

1 பழங்காலத்தில் பெருஞ்செல்வர்கள் வாகனத்திலும் பல்லக்கிலும், தீவட்டி பிடித்துப் பலர்துணையாக வர இரவில் வெளியேசென்று மீள்வர்.

2 'ஐம்படைத்தாலி' போலும்

3 மங்கலம்:-பிறமங்கலஅணிகள் போலும்

4 இவ்வரிகள் இக்காலத்துச் சேர்க்கப்பட்டிருக்கலாம்.

# ஈ ழ நா டு

## யாழ்ப்பாணம் மட்டக் களப்புப் பகுதிகள்



வண்ணச் சிற்றாடையுண்டு – மகனார்க்கு
மார்புக்குச் சட்டையுண்டு
இன்னும் உனக்கு என்னகுறையுண்டு ?
என்மகனே கண்வளராய் !”

[பக் - 74]

## தம்பி அழுதகண்ணீர்!

ஆராரோ ஆரிவரோ
    ஆராரோ ஆரிவரோ
தம்பி அழுதகண்ணீர்,
    1 ஆருகப் பெருகி ஆனை குளித்தேறி
குளமாகத் தேங்கிக்
    குதிரை குளித்தேறி
வாய்க்காலாய் ஓடி
    வழிப்போக்கர் வாய்கழுவி
இஞ்சிக்குப் பாய்ந்து
    எலுமிச்சை வேரோடி
மஞ்சளுக்குப் பாய்ந்து
    மருதோன்றி வேரோடி
தாழைக்குப் பாய்கையிலே
    தளும்பியதாம் கண்ணீரும்!
வாழைக்குப் பாய்கையிலே
    வற்றியதாம் கண்ணீரும்!!

"கண்ணீர் ஆருகப் பெருகுகிறதே" என்பது பொது வான உலக வழக்கு. தாய் இவ்வுலக வழக்கை அடித்தளமாகக் கொண்டு கற்பனைக்குப் பொலி வேற்றியிருக்கிருள். இதிலுள்ள நகைச்சுவையைத்

தவளை ஓசையிட—தம்பி'ட
தாமரையாள் பொய்கையிலே
சீறிற்ரூ நாகமது—தம்பி
உனக்குச் சிவந்ததடா கண்ணிரண்டும்!
[1] கோயில் மணியடிக்கத்—தம்பி'ட
குருமார் பூசைவைக்க!
ஆராரோ ஆரிரரோ
 ஆராரோ ஆரிரரோ!

கடுகு நிறத்தானே!

கண்ணுன கண்மணிக்குச்
 சுகமென்று கண்டேனென்ருல்
பொன்னுலே ஆலாத்தி
 நான்கொடுப்பேன் 'ஈஸ்பரிக்கு'!
[2] கடுகு நிறத்தானே—தம்பி
 காயாம்பூ மேனியனே
மாஞேடும் வீதியெல்லாம்—தம்பி
 தானோட வல்லவனே?
அரசரசி பூவரசி—தம்பி
 அரசாள வல்லவனே?

காதற் பசுங்கிளியே!

ஆராரோ ஆரிரரோ
 ஆரிரரோ ஆராரோ
கண்ணேஎன் கண்மணியே
 கட்டிக் கனிரசமே

1 தம்பித் தெய்வத்துக்கு வீட்டுக்கோவிலில் தாயர் உணவுப் பூசையிடுவர்போலும்!
2 மாநிறம்.

விண்ணே விண்ணூரமுதே
 வீர விளக்கொளியே
காதற் பசுங்கிளியே
 கற்பகப் பூங்கொடியே
1 கீத மணிக்குயிலே
 என்கிளிமொழியே கண்வளராய் !
தேன்மலர்த் தென்றலும்
 திங்களின் வெண்ணிலவும்
மேனிவருடப் பஞ்சு
 மெத்தையிற் கண்ணுறங்காய் !
தாரகை வானமோனத்
 தாலாட்டுப் பாடிடக்
கார்மேக வண்ணனின்
 காவலிற் கண்ணுறங்காய்
2 அன்பலை பொங்கும்பால்
 ஆழிமுத்தே மணியே !
3 இன்பலை பொங்கிவளர்
 என்மார்பில் கண்ணுறங்காய் !

அணில் கோதா மாம்பழமே !

ஆராரோ ஆரிவரோ
 ஆராரோ ஆரிவரோ
ஆரடிச்சோ நீயழுறாய்
 அரியகண்ணால் நீர்வழிய
அடிச்சாரைச் சொல்லியழு
 ஆக்கினைகள் பண்ணிவைப்போம் !

1 ‘கீதமினிய குயிலே’—(திருவாசகம்)

2 அன்பு+அலை.

3 இன்பு+அலை.

மாமி அடித்தாளோ
மல்லிகைப்பூச் செண்டாலே!
பாட்டி அடித்தாளோ
பால்வார்க்குஞ் சங்காலே
ஆச்சி அடித்தாளோ
அமுதூட்டுங் கையாலே
அண்ணு அடிச்சாளு
அரைஞாண் கயிற்ருலே
ஆண்பனையில் நுங்கே!
அணில்கோதா மாம்பழமே!
கூப்பிட்டு நான்கேட்பேன்
[1] குஞ்சரமே கண்வளராய்!
அண்ணன் அடித்ததுண்டோ
அம்மான்மார் வைததுண்டோ?
[2] "ஆரும் அடிக்கவில்லை
அங்கொருவர் தொடவுமில்லை
தம்பியவன்
தானே யழுகிருனும்
தன்னைப்பெற்ற தாயார்மடிதேடி
தாலாட்டும் கேளானும்
தாயின்முலைப் பாலையெண்ணி!"

### கூட மணிவிளக்கோ?

ஆராரோ ஆரிவரோ
ஆரிவரோ ஆராரோ
தேடக் கிடையாத
தெள்ளமுதோ சர்க்கரையோ?

1 குஞ்சரம்-யானைக்கன்று. 'குஞ்சரக்கன்று'- (அருட்பா) 'குஞ்சரவொழுகை பூட்டி' (பதிற்றுப்பத்து)
2 தாய்க்குப் பிறர் கூறும் பதிலாக இப்பகுதி விளங்குகிறது.

கூட மணிவிளக்கோ,
குழந்தாய்நீ கண்வளராய்!
சீர்கொண்ட நற்றவத்தைச்
செய்த [1] மிருகண்டருக்கு
மார்க்கண்டன் போலவந்த
மாமணியே கண்வளராய்!

[2] பத்துமாதக் கனி

ஆராரோ ஆரிரரோ ஆரிரரோ ஆராரோ
கண்ணே கருமணியே!—என்மகனே

1 மிருகண்டு என்றும் பதினாறாக வாழ வரம்பெற்ற மார்க்கண்டனுக்குத் தந்தை என்பது புராணம்.

2 இப்பாடல் மட்டக்களப்புப் பகுதியில் (கிழக்கு மாகாணம்) வழங்கும் தாலாட்டு. 'அணில் கோதா மாம் பழமே' என்ற தாலாட்டு யாழ்ப்பாணம் பகுதியில் வழங்குவது. இரண்டு பாடல்களிலும் சில இடங்களில் கருத்தொற்றுமை காணப்படினும் சொல், நடை வேறுபாடுகளும் இருக்கின்ற காரணத்தால் தனியே பதிப்பித்திருக்கிறோம். இன்னொன்று: இவ்விரு தாலாட்டுப் பாக்களையும் அடிப்படையாகக் கொண்டு ஓர் அணா, ஒன்றரையணா விலையில் 'நூதனபிள்ளை தாலாட்டு', 'சிறுபிள்ளை தாலாட்டு' என்றெல்லாம் வழங்குகின்றன. இச்சிறு புத்தகங்களில் தாய்மார்கள் வாய்மொழி மூலம் வழங்கிய பாடல்களைச் சிலர் மாற்றித் திரித்து மறுகோலஞ் செய்து தங்களது கைச்சரக்காகிய பாடல்களையும், வரிகளையும், சொற்களையும் சேர்த்துவிட்டு இலக்கியத்தைக் கேலிசெய்திருக்கிறார்கள். இடைக்கால இலக்கியங்களில் புகுத்தப்பட்ட செருகு பாடல்கள் போல, இவர்கள் பாடலும் 'தாய்மை இலக்கி'யத்தின் முன்னால் சாயம் வெளுத்து நிற்கிறது. இனியேனும் நாட்டுப் பாடல்களைப் பதிப்பிப்போர் தமது சொந்தச் சரக்கைக் கலக்காமல்-வரி மாற்றங்களை அறிந்து கோத்தலும், சிதைந்த சொற்களைச் சீர்படுத்தலும் தவிர்த்து வேறு எதுவும் செய்யாது 'இலக்கிய நேர்மை'யைக் கடைப்பிடிக்க வேண்டுகிறோம்.

கற்கண்டே சர்க்கரையே
என்னுர் உயிரே!
என்மகனே கண்ணுறங்காய்!

கொவ்வை இதழ்மகனே—என்
குவித்தநவ ரத்தினமே!
கட்டிப் பசும்பொன்னே—என்,
கண்மணியே நீயுறங்காய்!

மாணிக்கக் கால்நாட்டி—மகனே
வச்சிரத்தால் வடம்பூட்டி
ஆணிப்பொன் தொட்டிலிலே—என்,
அருமருந்தே கண்வளராய்!

அக்கா அடித்தாளோ—மகனுரை
அன்பின் கரத்தாலே?
விக்கிவிக்கித் தேம்பாமல்
வித்தகனே கண்ணுறங்காய்!

[1] பச்சை இலுப்பைவெட்டிப்
பால்வடியத் தொட்டில்கட்டித்
தொட்டிலும் பொன்னுலே
தொடுகயிறும் முத்தாலே!

முத்தளப்பான் செட்டி—தம்பிக்கு
முடி [2] சமைப்பான் ஆசாரி
தம்பிக்கு, ஓடும் [3] குழுக்காலி
ஒதுங்கிவரும் பால்மாடு!

1 இவ்வரியைப் பாண்டியநாட்டுத் தாலாட்டிலும் காணு கிரேம். 2. சமைப்பான்-செய்வான். 3. ஆடு, மாடு களின் கூட்டம்.

புன்னை ஒருமரந்தான்—தம்பி
புன்னை பூக்கும்பூ ஆயிரந்தான்
அன்னமே அருமருந்தே
ஆருயிரே கண்வளராய்!

பச்சைப் பசுங்கிளியே—தம்பி
பறக்குதடா தினைக்குருவி!
பகலெல்லாம் எங்கிருந்தாய்?—என்
பாலகனே கண்வளராய்!

காட்டுக் கிளிகளெல்லாம்—தம்பிக்குக்
காட்டிலேயோ வாழ்கிறது
வீட்டில் பிறந்தகண்ணே
மேதினியில் கண்ணுறங்காய்!

வெள்ளி விளக்கெரியத்—தம்பிக்கு
வெண்கலத்தால் தேர்ஓட
புள்ளிமயில் போலநீ
புலந்திரனே கண்ணுறங்காய்!

காய்ச்சிக் கறந்துசெல்வி—மகனே
காடேறி மேய்ந்தாளாம்
வீசினாள் செல்வி—மகனே
விரித்தாள் சடைமகுடம்

கரும்பே ரசமே
கனியமுதே என்மகனே!
விருப்பாய் நீகிடந்து
விளையாடி உறங்காயோ

பத்துமாதக் கனியே—என்மகனே
பால்பருகும் பைங்கிளியே
முத்துநவ ரத்தினமே!
முருகா, நீ கண்ணுறங்காய்

வன்னச்சிற் றுடையுண்டு—மகனுர்க்கு
மார்புக்குச் சட்டையுண்டு
இன்னம் உனக்கென்ன குறையுண்டு
என்மகனே கண்வளராய்!

ஆரடித்து நீயழுதாய்?—என்மகனே
அழுதகண்ணில் நீர்ததும்ப,
நீயுரைத்தால் நான்கேட்பேன்
நீலமணியே உறங்காய்!

அத்தை அடித்தாளோ—உன்னை
ஆமணக்கந் தண்டாலே,
சற்று மனம்பொறுத்து—என்
மகனே நீ கண்ணுறங்காய்!

பாட்டி அடித்தாளோ—உனக்குப்
பாலூட்டும் கையாலே,
கூப்பிட்டு நான்கேட்பேன்—என்
குஞ்சரமே கண்வளராய்!

மாமி அடித்தாளோ—மகனுரை
மைதீட்டும் கையாலே,
சாமி! மனம்பொறுத்துத்
தம்பிநீ கண்ணுறங்காய்!

தமையன் அடித்தானே—மகனுரைத்
தயிரூட்டும் கையாலே,
மனம் நொந்து நோகாமல்
மன்னவனே கண்வளராய்!

ஆச்சி அடித்தாளோ—உன்னை
ஆமணக்கந் தண்டாலே,

[1] பேச்சி அடித்தாளோ
பிரண்டங் கொழுந்தாலே!

பொழுதால் அடிஅளந்து—மகனே
புத்தகத்தால் நாள்பார்த்து
நித்தம் உன்னை வளர்த்தேன்
நிமலனே கண்வளராய்!

சங்கே புலித்தோலும்—தம்பிக்குச்
சன்னபின்ன மாலைகளும்
மாலை நல்ல மாலையடா—தம்பிக்கு
மல்லியப்பூத் தோள்மாலை!

மின்னிச்சோ வானமது—தம்பி
முழங்கிச்சோ ஆழியிலே
ஆழி தயிராகத்—தம்பிக்கு
ஆண்பனைகள் மத்தாக

பூணாரம் பூணத்—தம்பிக்குப்
புதன்கிழமை நல்லதினம்
காப்புக் கலகலெ'ன்ன
கைவளையல் ஓசையிட

கன்றுமான் கன்றே
கவரிமான் ஈன்றகன்றே
வெள்ளி வெளிச்சத்திலே—தம்பி நீ
விளையாடி ஓடிவா

சங்கு முழங்குதடா—தம்பி
சங்கரனார் கோவிலிலே
மாசிப் பிறையழகா—நீ
மாமாங்கத்தேர் அழகரல்லோ

1 பைத்தியம் பிடித்த பெண்.

[1] நீட்டோலை வாசிக்கத்—தம்பிக்கு
நெடுங்குருத்து வெள்ளோலை
வெள்ளோலை வாசிக்கத்—தம்பி
வேளாளர் பிள்ளையல்லோ !

வண்டுப் பனையோலை—தம்பிக்கு
[2] வாந்தெழுத நல்லோலை
கன்றுப் பனையோலை—தம்பிக்குக்
கணக்கெழுத நல்லோலை !

முத்தோ பவழமது—தம்பிக்கு
முன்கைக்குப் பொன்காப்பு !
மந்தாரம் போடுதங்கே
மழைக்காற்று வீசுதிங்கே !

வாடாத பூவே—தம்பிக்கு
வளமான மாலையடா !
தேடாத பொன்னே—தம்பிக்குத்
தெவிட்டாத பாலமுதே !

மதிமுகமும் வாடுவதோ ?

ஆராரோ ஆராரோ
ஆரடித்து நீ அழுதாய்
அஞ்சனக்கண் மைகரைய ?
மையும் கரைந்து
மதிமுகமும் வாடினதால்
செய்யுமொரு காரியங்கள்
தோணுமோ [3] சித்தடியே !

1 "நீட்டோலை வாசியா நின்றான்" மூதுரை (13)
2 வாந்தெழுத—வகிர்ந்து எழுத.
3 சித்தடி—சிற்றடி, சிறியபாதங்களையுடைய குழந்தையே!

சித்தடியே சித்தடியே
நான் செய்ததவம் நீ கேளாய்!
சித்தடியே நீபிறக்கச்
செய்ததவம் மெத்தவுண்டு

அம்புலியை வேண்டி
அரனார் தமைவேண்டிச்
சந்திரரை வேண்டிச்
'சரஸ்பதி'யைத் தான்வேண்டி

வண்டடையும் சோலை
மழையடையும் குற்றாலம்
குற்றாலமாடிக்
குமரித்துறையாடிப்

பால்மணக்கும் குற்றாலம்
பழம்மணக்கும் தென்காசி
வண்டடையும் சோலையிலே
வந்துதித்த மாமயிலோ!

பரத்திமகள் தெய்வானை
பத்தினியாள் இங்கிருக்கக்
குறத்திமகள் மையல்கொண்டு
குறவேடம் பூண்டாரோ!

வெள்ளிக்குதிரையிலே சுப்பையா
வேட்டைமுகம் போகையிலே
அள்ளிப்பணங் கொடுத்து
ஆண்குழந்தை தந்தாரோ?

அம்மானர் என்ன தந்தார்?

ஆராரோ ஆராரோ
ஆராரோ ஆராரோ

முத்தே பவழமே
முக்கனியே சர்க்கரையே
கொத்து மருக்கொழுந்தே
கோமளமே கண்வளராய்!
கண்ணே யுறங்குறங்கு
கண்மணியே நீயுறங்கு
பொன்னே யுறங்குறங்கு
பூமரத்து வண்டுறங்கு
நித்திரைசெய் நித்திரைசெய்
நித்திலப்பூந் தொட்டிலிலே!
கண்ணேஎன் கண்மணியே
கற்பகமே நித்திரைசெய்
பொன்னே யுறங்குறங்கு
புனத்துக் கிளியுறங்கு
கண்ணுன கண்ணனுக்குக்
கண்ணேறு வாராமல்
சுண்ணும்பும் மஞ்சளுமாய்ச்
சுற்றியெறி கண்ணனுக்கு!
1 ஆண்டம்மான் என்னதந்தான்
ஆனை கொடுத்துவிட்டான்
2 குட்டியம்மான் என்னதந்தான்
குன்றுமணித் தொட்டிலிட்டான்
செல்லம்மான் என்னதந்தான்
செம்பவழத் தொட்டிலிட்டான்
நல்லம்மான் என்னதந்தான்
நற்பவழத் தொட்டிலிட்டான்

1 மூத்த அம்மான் 2 இளைய அம்மான்
ஆண்டம்மான், குட்டியம்மான் என்ற முறைப்பெயர்கள்
மலையாளத்திலும் வழங்குகின்றன.

பொற்சங்கால் புகட்டினால்
புத்தி குறையுமென்று
வெள்ளிச்சங்கால் புகட்டினால்
வித்தை குறையுமென்று

நடுக்கடலில் மூழ்கி
நாரணனார் சங்கெடுத்துத்
திருப்பாற்கடல் மூழ்கித்
திருமாலின் சங்கெடுக்கப்

பொருக்கென் றெழுந்து
புறப்பட்டா னுங்களம்மான் !
1 அஞ்சு கிளியெழுதி
அம்மான்மார் பேரெழுதி

கொஞ்சுகிளி யெழுதிக்
கொண்டுவந்தான் உங்களம்மான்
கிண்ணியிலே சந்தனமும்
கிளிமூக்கு வெற்றிலையும்

தங்கத் தலைப்பாவும்
சாலுவையும் மேற்போட்டுச்
சங்கு கழுவித்
தளிகையிலே பாலாற்றிச்

சங்குகொள்ளப் போனஅம்மான்
சந்திரனோ சூரியனோ !
குளங்கலங்க நீர்மூழ்கிக்
கொடிபோல நாமமிட்டு
மலைகலங்கப் பாடிவரும்
மன்னர் மருமகனோ ?

1 இவ்வரி சோழநாட்டிலும், நாஞ்சில் நாட்டிலும் வழங்குகிறது.

அடிக் கரும்பைவெட்டி
ஆனைக்கே தீனியிட்டு
நுனிக்கரும்பை வில்வளைக்கும்
1 விசையர் மருமகனே!

சாவ லடிக்குச்
சமுதா டிடையிலிட்டுச்
சேவற்போர் எண்ணவரும்
சமர்த்தர் மருமகனே!

எண்ணெய் தலைமுழுகி
ஏகாந்தப் பொட்டுமிட்டு
வண்ணக்கவி பாடிவரும்
மன்னர் மருமகனே!

மானா மதுரையிலே
மாடுவிற்கும் சந்தையிலே
மாடுவிலை கூறவந்த
மந்திரியோ உங்களம்மான்!

2 தாயடிக்கக் கன்றழுமோ?

ஓரோரோ கண்ணே ஓரோரோ-அழகுகண்டே நீ
3 ஓராட்டும் கேளாயோ?
ஆரடிச்சு நீ அழுதாய்? - அழகுகண்ணே
அடிச்சாரைச் சொல்லியழு
பாலுக்கு அழுதாயோ - 4கண்டே நீ
பசித்தழுத பாலகரோ?
சீறி அழுதீரோ-என்ற கண்ணாரின்

1 விசையர்—வில்லை விசையோடு வளைப்பவர். (விஜயன் என்றால் அருச்சுனனைக் குறிக்கும்)

2 இப்பாடல் இலங்கையில் முசுலீம் தாய்மாரிடையே வழங்குவது. 3 ஓராட்டு—தாலாட்டு. 4 கண்டு-கற்கண்டு.

சிவந்தகண்ணால் நீர்சொரிய!
தாயடிக்கக் கன்றழுமோ? - அழகுகண்டே
தானடிச்சாரைச் சொல்லிஅழு
ஆரும் அடிச்சதில்லே-அழகுகண்டாருக்கு
அணிவிரலால் தொட்டதில்லே
பிள்ளேயில்லா நாளேயிலே-அழகுகண்டார் நீ
பிள்ளேக்கலி தீர்த்தவரோ?
மலேயாம் முலேசுரந்து-அழகுகண்டார் நீ
மனமாரப் பாலுண்டவரோ?
சூகமுலேசுரந்து—அழகுகண்டார் நீ
[1] சூக்குசமாய்ப் பாலுண்டவரோ?
மாடப்புருவோ?—அழகுகண்டே நீ
மலேநாட்டு [2] நங்கணமோ?
மானேடும் தூரமெல்லாம்—அழகுகண்டே நீ
தானேடும் வல்லவரோ?
தங்கப்பொன்னே தம்பியரோ? — அழகுகண்டே நீ
தங்க வயிடூரியமோ?
தங்க மலடோ?-அழகுகண்டார் நீ
தனிமலடு தீர்த்தவரோ?
சாந்தால் தலேமுழுகி—அழகுகண்டே உனக்குச்
சந்தணத்தால் நல்ல பொட்டுமிட்டு
நீலமொரு பட்டுடுத்து-அழகுகண்டாருக்கு
நித்தமொரு பூச்சூடி
வானத்தில் கண்டமின்னே?—அழகுகண்டே நீ
மழைக்கால் இளம்பிறையோ
மின்னின் ஒளியோ!—அழகுகண்டே நீ
மேகத்தின் தன்னெளியோ!
கிளியோ கதைக்கிறது—அழகுகண்டே
கிளிகிண்ணரமோ ஈனபேசுறது!
மயிலோ கதைக்கிறது—அழகுகண்டே

---

1 சூக்குசமாய்—எளிதாக. 2 ஒருவகைப் பறவை போலும்.

மலை நங்கணமோ ஈனபேசுறது!
மாமன் ஒருகோடி—அழகுகண்டாருக்கு
மச்சினமார் முக்கோடி
மாமன் பொலிஅளக்க—அழகுகண்டாருக்கு
மச்சினமார் தாலாட்ட
பட்டமரம் தழைக்க—அழகுகண்டாருக்கு
பலகனிகள் தான்சொரிய
கரடிகவிபாட—அழகுகண்டாருக்குக்
கண்டபுலி தெண்டனிட
காட்டானை காட்டெருமை—அழகுகண்டாருக்கு
கறக்க நல்ல பால்மாடு
வேட்டைநாய் காவலுமோ—அழகுகண்டாருக்கு
வேங்கைப்புலி காவலுமோ!
ஆலம்பழமோ—அழகுகண்டார் நீ
அழகுகிளி மாம்பழமோ!
வெத்திலைப்பூவோ—அழகுகண்டே நீ
விரிஞ்சசெந் தாமரையோ
மதுரையில் குதிரையுண்டு—அழகுகண்டாருக்கு
மாமரத்தில் ஊஞ்சல்உண்டு
வெள்ளி உருவெடுத்து—அழகுகண்டார் நீ
விளையாட வந்தவரோ!
பொன்னின் சுளகுகொண்டு—அழகுகண்டார் நீ
பூப்பொறுக்கும் வல்லவரோ!
பெற்றதாய் முத்தோ!—அழகுகண்டே
பெரியதாய் பேரரசோ!
கண்ணான கண்டாருக்கு—அழகுகண்டே ஒரு
கட்டமும் வாராமல்
கண்ணான கண்ணுருக்கு—அழகுகண்டே ஒரு
கண்ணூறும் இல்லாமல்
காணிக்கை நேர்ந்து—அழகுகண்டாருக்கு

கணக்கில்லாப் பொன்நேர்ந்து
மாணிக்கம் நேர்ந்து—அழகுகண்டாருக்கு
மலையுயரும் பொன்னேர்ந்து
அல்லா(ஹ்)ட காவலிலே—அழகுகண்டாருக்கு ஒரு
ஆபத்தும் இல்லாமல்
பட்டாலே தொட்டிலுமோ—அழகு கண்டாருக்குப்
பணிப்புடவ நல்ல சாலையுமோ!
சால உதறி—அழகுண்டார் உனக்குத்
தந்திரமாய்ப் பாய்போட்டு
நித்திரை கொண்டவுடன்—அழகுகண்டே உனக்கு
நேராகப் பாய் போட்டு
கண்ணே உறங்குறங்கு--அழகுகண்டாரின்
கண்மலரே நித்திரை செய்!

மருந்துவச்சி வாழ்த்து

அயலும் புடையும் வாழவும் வேண்டும்
அன்னமும் சுற்றமும் வாழவும் வேண்டும்
ஆச்சியும் அப்புவும் வாழவும் வேண்டும்
அம்மானும் மாமியும் வாழவும் வேண்டும்

அரிசி மலைநாடும் கண்டீரோ தம்பி
அரிசிப் பொதியோடும் வந்தீரோ தம்பி
நெல்லு மலைநாடும் கண்டீரோ தம்பி
நெல்லுப் பொதியோடும் வந்தீரோ தம்பி

உள்ளி மலைநாடும் கண்டீரோ தம்பி
உள்ளிப் பொதியோடும் வந்தீரோ தம்பி
மஞ்சள் மலைநாடும் கண்டீரோ தம்பி
மஞ்சட் பொதியோடும் வந்தீரோ தம்பி

மிளகு மலைநாடும் கண்டீரோ தம்பி
மிளகுப் பொதியோடும் வந்தீரோ தம்பி
காசு மலைநாடும் கண்டீரோ தம்பி
காசுப் பொதியோடும் வந்தீரோ தம்பி

இஞ்சிமலை நாடும் கண்டீரோ தம்பி
இஞ்சிப் பொதியோடும் வந்தீரோ தம்பி
உப்பு மலைநாடும் கண்டீரோ தம்பி
உப்புப் பொதியோடும் வந்தீரோ தம்பி

கோச்சி வாழ கொப்பர் வாழ
பேத்தி வாழ பேரன் வாழ
[1] பூட்டி வாழ [2] பூட்டன் வாழ
[3] கொம்மான் வாழ மாமி வாழ

குஞ்சியாச்சி வாழ குஞ்சியப்பு வாழ
பெரியாச்சி வாழ பெரியப்பு வாழ
ஊர் வாழ தேசம் வாழ
இனம் சுற்றம் எல்லோரும் வாழ
குருவுக்கும் சிவனுக்கும்
[4] நல்ல பிள்ளையாய் இருந்து வாழ்க!

1 பூட்டி—பாட்டிக்குத் தந்தை. 2 பூட்டன்—பாட்டனுக்குத் தந்தை. 3 கொம்மான்-உன் அம்மான். குஞ்சியாச்சி-சின்னம்மா. குஞ்சியப்பு-சித்தப்பா. பெரியாச்சி-பெரியம்மா.

4 தமிழை ஈழநாட்டார் ஒலிக்கும் முறையும் மலையாள மொழியின் ஒலிமுறையும் ஒத்திருக்கின்றன. உள்ளி, மிளகு, மஞ்சள், இஞ்சி, உப்பு என்ற விளைபொருட்களைக் கவனித்தால் இவை மலைபடுபொருளும், கடல்படு பொருளும் ஆகும் என்பது தெளியலாம். மலையாளப் பகுதியே மலையும் கடலும் சார்ந்த இடம். குற்ருலம், தென்காசி, திருநெல்வேலி, குமரித்துறை அனைய பல பெயர்களை இப் பாடல்களில் காண்கிறோம். தென் பாண்டி நாட்டு ஊர்ப் பெயர்கள் பல யாழ்ப்பாணப் பகுதியின் ஊர்ப் பெயர்களாகத் திகழ்வதே இதற்குக் காரணம். ஆச்சி, அப்பு, ஆண்டம்மான், குட்டியம்மான் முதலிய முறைப் பெயரொற்றுமைகளும் காண்கிறோம். இவற்றின் மூலம் நமக்குத் தெளிவாவது: தென்னாடும் இலங்கையும் ஒரே நிலப் பரப்பாய் ஒரு காலத்து விளங்கியிருக்கவேண்டும், அல்லது தென் பாண்டி நாடு உள்ளிட்ட சேரநாட்டுப் (மலையாள) பகுதிகளிலிருந்து இன்றைய யாழ்ப்பாணப் பகுதிகட்கு மக்கள் குடியேறியிருக்கவேண்டும் என்பதாகும்.

# சோழ நாடு

## தஞ்சை திருச்சி மாவட்டங்கள்




கண்ணே கமலப்பூ! கண்ணிரண்டும் தாமரைப்பூ!
மேனி மகிழம்பூ! மேற்புருவம் சண்பகப்பூ!

[பக் - 87]

## காதணி விழா

ஆராரோ ஆரிரரோ ஆரிரரோ ஆராரோ
ஆறல்லோ காவேரி—என் ஐயனுக்கு
நூறல்லோ நல்வயது !

கண்ணான தம்பிக்குக்
காதுகுத்தப் போகுதென்று
முந்நூறு கோட்டையிலே
முதற்கோட்டை நெல்லெடுத்து
நானூறு கோட்டையிலே
நடுக்கோட்டை நெல்லெடுத்து
குத்துமென்பார் பச்சரிசி
கொழியுமென்பார் காப்பரிசி
கொல்லத்து வெல்லமும்
கோதில்லாச் சர்க்கரையும்
எள்ளுங் கழுவிவிட்டு
இளந்தேங்காய் கீறிவிட்டு

அரிசிப் பொரியலென்றார்
அடித்தேங்காய் கீறலென்றார்
எள்ளுப் பொரியலென்றார்
இளந்தேங்காய் கீறலென்றார்

பெட்டி திறந்து பிடித்தபிடி பொன்னெடுத்து
அத்திக்காய் [1] வாளிசெய்து மலர்ந்த சிமிக்கி செய்து
மாமன் மடியிலே மாலைபோட்டுக் குந்தவைத்துக்
கோடி உடுத்திக் காது குத்துமென்பார் சுந்தரர்க்கு!
தட்டில் அரிசிவரும் தாய்மாமன் சீரும்வரும்
முறத்தில் அரிசிவரும் முதல்மாமன் சீரும்வரும்
அள்ளி வழங்குவார் அருமைமாமன் காப்பரிசி!
பிடித்து வழங்குவார் பெரியமாமன் காப்பரிசி!!

தாய்மாமன் சீர்வரிசை

முத்தான முத்தோ!—என்கண்ணே நீ
[2] மூவாக்கள் ஆண்டமுத்தோ!
கோத்த முத்தோ!—என்கண்ணே நீ
குறத்திகையில் தாழ்வடமோ?
ஆராய்ந்த முத்தோ நீ—என்கண்ணே
அடிக்கடலின் ஆணிமுத்தோ?
முத்தோ பவழமோ—என்கண்ணே
முன்கையின் பொன்காப்போ?

மார்நிறையச் சந்தணமாம்
மடிநிறைய வெற்றிலையாம்
சேர்நிறைந்த களிப்பாக்காம்—உனக்குச்
சீர்கொடுப்பார் தாய்மாமன்!

கனி. 2 *மன்னோர்கள்.

காஞ்சிபுரத் தெண்ணெய்—என்கண்ணே உன்
கண்ணைக் கரிக்குமென்று
சேலத்து எண்ணெய்க்கு—உங்களம்மான்
சீட்டெழுதி விட்டாரோ ?

[1] காலை ரயிலேறிக்
கல்கத்தா போயிறங்கி
கடைக்குக் கடைபார்த்துக்
கல்லிழைத்த சங்கெடுத்துச்
சுத்திச் சிகப்பிழைத்துத்
தூருக்கே பச்சைவைத்து
வாய்க்கு வயிரம்வைத்து
வாங்கிவந்தார் தாய்மாமன் !
கண்ணே உறங்கு
கண்மணியே கண்ணுறங்கு !!

## கண்ணே கமலப்பூ !

கண்ணே கமலப்பூ ! கண்ணிரண்டும் தாமரைப்பூ !!
கண்மணியே ஏலப்பூ ! காதிரண்டும் பிச்சிப்பூ !
மேனி மகிழம்பூ ! மேற்புருவம் சண்பகப்பூ !

[2] கண்ணான கண்ணனுக்குக்
கண்ணுறக்கம் இல்லையென்று
தூங்காத கண்ணுக்குத்
துரும்புகொண்டு மையெழுதி
உறங்காத கண்ணுக்கு
ஓலைகொண்டு மையெழுதி
கண்ணுக்கே மையெழுதிக்
கண்கவரப் பொட்டுமிட்டு

1 இப்பகுதி பாண்டிய நாட்டிலும் வழங்குகிறது.
2 இவ்வரிகளை ஈழநாட்டிலும்,. கொங்கு நாட்டிலும் கேட்கலாம்.

வண்டுகள் கவிபாட
மரங்கள் நடமாட
செண்டுகள் ஆடத்
தேசத்தார் கொண்டாட
ஆடுமாம் தூளி
அசையுமாம் பொன்னூஞ்சல்
தாய்மார்கள் தாலாட்டத்
தாதியர்கள் ஏணைதள்ள
அரம்பையர்கள் தாலாட்ட
அரசர்கள் சூழ்ந்துநிற்க
கண்ணே உறங்கு
கற்பகமே நித்திரைபோ!
நித்திரையும் போவாயாம்
சித்திரப்பூந் தொட்டிலிலே!

தொட்டில் சிறப்பு

[1] புகட்டுப்பால் [2] புகட்டிவிட்டுப்
பொற்றொட்டில் போட்டாட்டச்
சதுரகிரி மலையேறிச்
சாதிலிங்கக் கட்டைவெட்டி
ஈழத்துக் கப்பலிலே
ஏற்றிவரும் தேக்குமரம்
ஏழுதச்சன் ஆசாரி
இழைப்பு இழைக்கும் கம்மாளர்
சேர்த்துப் பணிப்படுத்திச்
சித்திரத்தால் ஒப்பமிட்டு
வலதுபுறத் தொட்டிலுக்கு
மாணிக்கக் கல்லிழைத்து

1 புகட்டுப்பால்—தாய்ப்பால்.
2 புகட்டிவிட்டு (புகட்டுதல்—ஊட்டுதல்)

இடதுபுறத் தொட்டிலுக்கு
　　இரத்தினத்தால் கல்லிழைத்து
முன்பக்கத் தொட்டிலுக்கு
　　முத்துச்சரம் வைத்திழைத்து
பின்பக்கத் தொட்டிலுக்குப்
　　பச்சைக்கல் வைத்திழைத்து
அஞ்சுகிளி கொஞ்ச
　　ஆண்டம்மான் பேரெழுதி
கொஞ்சுகிளி அஞ்செழுதிக்
　　குட்டியம்மான் பேரெழுதி
சிரிக்குங் கிளியெழுதி—உங்கள்
　　சின்னய்யா பேரெழுதி
அன்னம் எழுதி
　　அதன்மேல் புருவெழுதி
தாரா எழுதித்
　　தாய்மாமன் பேரெழுதி
பஞ்சாட் சரமெழுதி—உங்கள்
　　பாட்டனார் பேரெழுதிக்
கொண்டுவந்து கண்டானே—ஆசாரி
　　கொம்பனையாள் வாசலிலே!

### ஊஞ்சலுக்கு வெகுமானம்

ஏலம்பூ ஊஞ்சலுக்கு
　　என்ன கொடுப்பதென்று
கிண்ணியிலே சந்தணமும்
　　கிளிமூக்கு வெற்றிலையும்
பொன்னாரம் முத்தாலே
　　புதுக்காப்பும் சங்கிலியும்
கழுத்துக்குத் தங்கவடம்
　　காதுக்குப் பொற்கடுக்கன்

தோளுக்குப் பொன்னுருமால்
துப்பட்டா பட்டாலே
அரைக்கு அரைஞாணும்
அடித்தகைக்கு மோதிரமும்
சரிகைத் தலைப்பாவும்
சம்மதித்த சால்வைகளும்
பத்து விரலுக்குப்
பசும்பொன்னால் மோதிரமும்
எட்டு விரலுக்கு
இழைப்(பு)இழைத்த மோதிரமும்
போட்டுப் பெருமைசெய்து
போகச்சொன்னார் உன்மாமன்
போதுமென்று எழுந்திருந்தார்
பொறுமையுள்ள ஆசாரி!

# நாஞ்சில் நாடு

## தென் திருவாங்கூர்ப் பகுதி

" கரும்புருகத் தேனுருகக்
கண்டார் மனமுருக
எலும்புருகப் பெற்றெடுத்த
இலஞ்சியமே...... !

[ பக் - 91 ]

ஏனழுதாய் பிள்ளாய்?...

வாவா ஓ கண்ணே வாழ்வரசே வாவா ஓ
கண்ணே உறங்கு கண்மணியே நீஉறங்கு
பொன்னே உறங்கு பூமரத்தின் வண்டுறங்கு
வண்டாடும் பிச்சி, மலரும் இருவாட்சி
கொண்டாடிச் சாத்துமய்யா குமரவடி வேலவற்கு!
வாடாமல் சாத்துமய்யா வடபழனி வேலவர்க்கு
(வாவா ஓ...)

ஆரடிச்சா நீயழுதாய் அடிச்சாரைச் சொல்லியழு!
கரும்புருகத் தேனுருகக் கண்டார் மனமுருக
எலும்புருகப் பெற்றெடுத்த [1] இலஞ்சியமே ஏனழுதாய்?
ஏனழுதாய் பிள்ளாய் நீ? ஏதுமரம் தொட்டிலுக்கு
நீண்டமரம் நெல்லி நெடியமரம் மாவிலுப்பை
அறுப்புப் பலாமரமாம் ஆயணியாந் தேக்குமரம்
தேக்குமரம் வெட்டிச் செதுக்கினான் ஆசாரி
ஐந்து மரங்கூட்டி அழகான தொட்டில்கூட்டி
வலதுபுறம்தொட்டிலிலே வரிசையம்மான்பேரெழுதி
இடதுபுறம் தொட்டிலிலே இளையம்மான் பேரெழுதி
ஆடுமாம் தொட்டில் அசையுமாம் பொன்னூணி
ஓடுமாம் தொட்டில் உயருமாம் பொன்னூணி
பாடுமாம் தொட்டில்முன்னே பஞ்சவண்ணக்கிளிகள்
(வாவா ஓ...)

---

1. இலஞ்சிப்பூ.

## பாலும் பசுவும்

ஆரடிச்சா நீயழுதாய்?
அடிச்சாரைச் சொல்லியழு!
'ஆரும் அடிக்கவில்லே
அன்னியரும் தீண்டவில்லே
தான்பசிச்சுத் தானழுதேன்
தாயார் பால்குடிக்க'
காலத்தே வாபசுவே!
கண்ணுமகன் பால்குடிக்க
பொழுதிருக்க வாபசுவே
பொன்னுமகன் பால்குடிக்க
பாற்பசுவைத் தேடிப்
போனார்தான் உங்களப்பா
காடெல்லாம் சுற்றிக்
காராம் பசுதேடி
நாடெல்லாம் சுற்றி
நல்லபசுக் கொண்டுவந்தார்
கொண்டுவந்த பாற்பசு(வு)க்குக்
கொம்பெல்லாம் தங்கநிறம்
கொம்புக்குக் [1] குப்பிகட்டிக்
கோல்விழிக்கு மையெழுதிக்
கறக்கக் [2] கடைகாலாம்
கன்றுகட்டப் பொற்றூணும்

1. பூண்.

2. படிக்கணக்காக அன்று, கடைகால் கணக்காகப் பால் கறக்குமாம் பசு. கடைகால் — செட்டி நாட்டிலும் வழங்கும் சொல்.

வடகடல் முத்தை
வாரி உமிகூட்டி
தென்கடல் மாணிக்கம்
திரட்டி அடுப்பாக்கி
வெண்கலப் பானை
விளக்கி அடுப்பில்வைத்துச்
சந்தணக் கட்டை
தறிச்சு அடுப்பில்வைத்து
வெள்ளிக் குழல்கொண்டு
வெள்ளாட்டி தீஊத
தங்க அகப்பைகொண்டு—உன்னைப்பெற்ற
பொற்கொடியாள் பாலாற்ற
சங்கு கழுவித்
தளிகையிலே பாலாற்றிப்
பாலமிழ்தம் உண்ண
எழுந்திரம்'மா பசுங்கிளியே!
'பாலமிழ்தம் வேண்டாம்
பசியில்லை மாதாவே!'

### வாழும் அரசு

வாழும் அரசே!
வைத்தாளும் பெட்டகமே!
எங்கள் குடிக்கரசே!
எங்குடிக்கு நாயகனே!
தங்கள்குடி மங்காமல்
தாளுள வந்தகண்ணே!
கண்ணுமான் கண்ணே
கவரிமான் பெற்றகண்ணே
புள்ளிமான் கண்ணே
புத்திமான் பெற்றகண்ணே

பெற்ரேர்க்கு முத்தே
பெரியார்க்குப் பாற்குடமே
மற்றுமுள்ள [1] தாய்மார்க்கு
வரிசை மகனே நீ ?
வல்லார் மகனே
வலியார் மருமகனே !
சொல்லாற் புகழடைக்கும்
சோழருடைப் பேரரசோ
ஆறடைக்கும் கோரை
அணையடைப்பார் நாட்டாரே
[2] சபையடைக்க வார்த்தைசொல்லும்
சமர்த்தருடைப் பேரரசோ !
ஊரடைக்க வார்த்தைசொல்லும்
உத்தமனர் பெற்றகண்ணே
அண்ணுக்குந் தேனே
அடிநாக்கும் சர்க்கரையோ
உண்ணுக்கின் கீழே
ஊறும் அமிழ்தமதோ !
மாங்கனியோ தேங்கனியோ
வருக்கைப் பலாக்கனியோ
கொம்புக் கனியோ
கோறைபடா மாங்கனியோ
மல்லிகைப் பூவோ
மருக்கொழுந்தோ சண்பகமோ
முல்லை நறுமலரோ
[3] முருகவிழ்க்கும் தாமரையோ !

1 செவிலித் தாயர்.
2 சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து —குறள் (645)
3 மணம், தேன்.

நல்லம்மான் கொல்லையிலே
    புள்ளிமான் மேயுதென்று
விரட்டிப் பிடியும் என்றார்
    வீரதண்டை தானசைய!
பார்த்துப் பிடியும் என்றார்
    பாதசரம் தானசைய!

வம்புக்கோ நீயழுதாய்
    உன் வாயெல்லாம் தேனூற
தேனுந்தான் ஊறுதோ
    உன் செல்லவாய் நோவாதோ?
பாலுந்தான் ஊறுதோ
    உன் பவழவாய் நோவாதோ?

சுசீந்திரம் தாணுமாலயர் தாலாட்டு

ஆச்சிரா மடமாம்
    அருகே சுசீந்திரமாம்
சுசிந்தைத் தலத்திலே
    தட்சணு பூமியிலே
கொன்றை அடியிலே
    குதித்துவந்தார் தாணுவரும்!
மூங்கி லடியிலே
    முளைத்துவந்தார் தாணுவரும்!
தவளையில்லாத் தண்ணீராம்
    சாத்துவார் தாணுவர்க்கு!
ஏழறையாம் கோபுரமாம்
    எறும்பேரு மண்டபமாம்
பத்தறையாம் கோபுரமாம்
    பாம்பேரு மண்டபமாம்
பாம்பேரு மண்டபத்தில்
    பள்ளிகொண்டார் தாணுவரும்!

பேரம் பலமாம்
    பெருமாளின் சந்நிதியாம்
அக்கேறு கொன்றை
    அருகே சிறுதுளசி
தெக்கிடத்தைச் சாத்துமய்யா
    சிவதாணு மாலயர்க்கு !
பேயம் பழத்திற்குப்
    பேதலித்தார் தாணுவரும் !

மார்கழி மாதம்
    வருடத் திருவிழாவாம்
ஒன்பதாம் நாளையிலே
    உமையம்மன் தேரோட்டம்
நம்பிதேர் ஓட
    நாட்டார் வடம்பிடிக்க
அசையா மணிகுலுங்க
    ஆனைநெடுந் தேரசைய
நான்கு தெருவிலும்
    நடுத்தெருவைச் சுற்றிவந்து
சந்நிதியின் முன்பாகச்
    சாமிதேர் வந்துநிற்கத்
1 தேரசைய மணிகுலுங்கத்
    தேசத்தார் கைகுவிக்கக்
கும்பிட வந்த
    குழந்தையை ஆரடித்தார் ?
தெரிசிக்க வந்த
    திரவியத்தை ஆரடித்தார் ? (வாவா ஓ ..)

1 தேர் நிலைகுத்தும் காட்சி காண்க.

# தென்பாண்டி நாடு

## திருநெல்வேலி மாவட்டம்



" ஆளப் பிறந்தவனே
அரசாள வந்தவனே !...
கண்ணுக் கினியானே
கற்கண்டுச் சொல்லழகா !"

[ பக்.98 - 101 ]

## அதியமலை பொதியமலை

அதியமலை பொதியமலை - என் கண்ணே
அகத்தீசர் ஆளுமலை
கங்கை திரண்டமலை - என் கண்ணே
கிருபையுள்ள பொதியமலை
தேவர்களும் முனிவர்களும் - என் கண்ணே
தேவபூசை செய்யுமலை
நாகமலை தோகைமலை
சுவாமியுளம் சுற்றும்மலை
ஏழுமலை கழித்து
சுவாமிபழனி போய்ச்சேர்ந்து
பார்வதியாள் பாலகனைப்
பாதம் பணிந்துவந்தேன்!

பச்சைநிற வள்ளியம்மா
பவழநிறத் தெய்வானை
சோதிநிற வேலவரும்
சொல்லிவரம் தந்தாரோ!

மலடி மனமுருகப்
பார்த்தவர்கள் நின்றுருகக்
கல்லுருகச் செம்புருகக்
கண்டார் மனமுருக - என்
எலும்புருகத் தந்தபிச்சை - என்
அதிசயத்தை யாரடித்தார்?

வடக்கே வெகுதூரம்
வளருதாம் கல்மூங்கில்
வீமனுக்கு வில்லாக
விசையனுக்கு அம்பாக - என்
அர்ச்சுன பாலருக்குச்
கண்டுவில்லோ இரண்டாக
வண்டடர்ந்த சோலை
மலைபடர்ந்த குற்றாலம்

தவளை குலவையிடத்
தாமரையும் பூமலர
[1]தாமரை மலரெடுத்து - ஆவுடையாள்
தனிப்பசுவின் நெய்கொண்டு
வாழை இலையும் - மாவிளக்கும்
[2]கோமதியாள் சன்னிதியில் வைத்தெடுத்து
ஆவுடையாள் தன் சந்தோச
வேளையிலே தந்தாளோ,
தந்தசிறு குழந்தை - சுவாமி
தாரணியில் வளர்ந்துவர !

**என் வயிற்றில் ஏன் பிறந்தாய் ?**

என்வயிறு தேடி
ஏன்பிறந்தாய் செல்வமே !
ஆராரோ ஆராரோ
ஆரிவரோ ஆராரோ
ஆளப் பிறந்தவனே !
அரசாள வந்தவனே !

1 பாண்டிநாட்டில் இத் தாலாட்டின் கருத்துப்படச் சில கண்ணிகள் உள.

2 ஆவுடையாள், கோமதியாள் என்பன சங்கரன்கோயில் அம்மனின் திருப்பெயர்கள்.

நீள வரும்வழியில்
    நேரில்என்னைக் கண்டாயோ !
முத்துச் சிரிப்பழகா
    முல்லைப்பூப் பல்லழகா !
வெத்துக் குடிசையிலே
    விளையாட வந்தாயோ?
ஏழைக் குடிசையிலே
    ஈரத் தரைமேலே
தாழம்பாய் போட்டுத்
    தவழ்ந்தோட வந்தாயோ ?

தரையெல்லாம் மேடுபள்ளம்
    தவழ்ந்தால் உறுத்தாதோ !
பளிங்கால் அரண்மனையும்
    பவழத்தூண் மாளிகையும்
பணக்காரன் வீடிருக்கப்
    பஞ்சன் இடம் வந்ததுமேன் ?
பச்சரிசி சோளம்
    பாதிநாள் பட்டினிதான் !
பசும்பால் கொடுத்துந்தன்
    பசிதீர்க்கப் பார்த்தாலும்
பருத்திவிதை இல்லையடா
    பசுபாலு தரலையடா !
ஆட்டுப்பால் ஊட்டியுனை
    அதிகரிக்கப் பார்த்தாலும்
ஆடுகடிக்கும் மரம்
    அத்தனையும் மொட்டையடா !
பிள்ளைப்பால் ஊட்டியுனைப்
    போசனைகள் செய்திடவே
கொள்ளையுத்தம் பஞ்சங்
    குரங்காகிப் போனேண்டா !

நெல்லைப் புதுக்கிவைத்து
நிட்டூரம் பண்ணிடுவோன்
கொல்லைவழி போகாமல்
குடிசைவழி வந்தாயோ!
தொட்டால் பிசுக்கொட்டும்
துணிமூட்டை தையலிட்டுத்
தொட்டில்கட்டித் தாலாட்டத்
[1]தூக்கம் வருமோடா?

ஏழையின் செல்வன்!

ஏழைக் குடிசையிலே
ஏன்பிறந்தாய் செல்வமுத்தே?
எத்தனையோ சீமாட்டி
ஏங்கித் தவங்கிடக்க
என்வயிறு தான்தேடி
ஏன்பிறந்தாய் செல்வமுத்தே!

கதிரறுக்கும் நேரத்திலே
கட்டியுன்னைத் தோளிலிட்டால்
மதியத்து வெய்யிலிலே
மயக்கமுந்தான் வருகாதோ?

வயலிலே வேலைசெய்வேன்
வரப்பினிலே போட்டிடுவேன்!
வயலைவிட்டு ஏறுமுன்னம்
வாய்விட்டு அழுவாயோ!

சித்தாளு வேலைசெய்வேன்
கொத்தனார் கோபிப்பார்

இப்பாடலும் இதற்கடுத்த பாடலும் 'பள்ளி ஓராட்டு' என்று வழங்குகின்றன. ஓராட்டு-தாலாட்டு. எனவே இது பழங்குடி மக்கள் தாலாட்டாகும். பாண்டியநாட்டுப் பழங்குடி மக்கள் தாலாட்டும் இத்தொகுப்பில் உள்ளது.

கொத்தனர் கோபித்தால்
குழந்தைமனம் கோணுதோ ?

கண்ணுக்கு இனியானே
கற்கண்டுச் சொல்லழகா !

மாமனர் வந்திடுவார்
மார்மேலே சீராட்ட

பொன்னுக் குடைமாமன்
புறப்பட்டு வந்திடுவான்

பாட்டியாள் வந்திடுவாள்
பாட்டுச்சொல்லித் தாலாட்ட

அத்தையார் வந்திடுவார்
அடுக்களைச் சோறூட்ட

எல்லாரும் வந்திடுவார்
[1] ஆனபணம் உண்டானல் !

உன்னைப்போல் செல்வனை நான்
உலகெங்கும் கண்டதில்லை !

என்னைப்போல் ஏழையை நீ
எங்காச்சும் கண்டதுண்டோ ?

சொல்லுப் புரிந்திடுமோ
தூக்கம் கலைந்திடுமோ

தூக்கம் கலைந்து—சென்னைத் [2]
துரைமுகமும் [3]கேவிடுமோ !

தாளை வந்தானே !

ஆளப் பிறந்தானே
அரசாள வந்தானே !

---

1 எல்லோரும் வருவார்களாம், பணமிருந்தால் ...! இல்லாதபோது யாருமே வரமாட்டார்கள் என்பதைத் தாய் சொல்லாமற் சொல்கிருள் !

2 தன்னை ஏழையென்று சொல்லிக்கொள்ளும் தாய்தான் தன் மகனைச் 'சென்னைத் துரை' யென்று சொல்லுகிருள். 3 கேவுதல்—தேம்பி அழல்.

தானே வளர்ந்தானே
　　தருமர்கள் தந்தவனே!
அஞ்சு குடிக்கரசோ
　　[1] பஞ்சவர்கள் பாற்குடமோ!
முப்பாட்ட ஞண்ட
　　முகப்புத் தலைவாசல்
தப்பாமல் ஆளத்
　　　தவம்பெற்று வந்தானே!

அப்பாட்ட ஞண்ட
　　அரசுபல நாடு
தப்பாமல் ஆளத்
　　தவசுபண்ணி வந்தானே!
பாட்டனுராண்ட
　　பழுதில்லா ராச்சியத்தைத்
தாயாதி ஆளாதே
　　தானுள வந்தானே

தோப்பனு ராண்ட
　　தோப்புத் துரவுகளை
ஆளப் பிறந்தானே
　　அரசாள வந்தானே!
[2] மதுரை யறுகாதம்
　　வாழ்மதுரை முக்காதம்
ஐம்பத் தாறுகாதம்
　　ஆளவந்த செல்வனேநீ
ஆளப் பிறந்தானே
　　அரசாள வந்தானே!

1 பஞ்சவர்கள்—பாண்டியர்கள்.

2 பாண்டியநாட்டுத்தாலாட்டிலும் இவ்வரிகளைக்காணலாம்.

# கொங்கு நாடு

## கோவை மாவட்டம்




உறங்காத கண்ணுக்கு
ஊசிகொண்டு மையெழுதி
தூங்காத கண்ணுக்குத்
துரும்புகொண்டு மையெழுதி

[பக் •

## ஏங்கி அழுவதேன்?

ஆராரோ ஆரிரரோ
    ஆராரோ ஆரிரரோ
ஆராரோ என்கண்ணே
    ஆரடித்தார் ஏனழுதாய்?
அடித்தவரைச் சொல்லியழு,
    நான் அடிக்கடியே வாங்கிடுவேன்!
நீ, கூவி அழுவதென்ன
    குயிலின் குரல்நோக
நீ, ஏங்கி அழுவதென்ன
    ஏலம்பூ வாய்நோக
நீ, பாடி அழுவதென்ன
    உன்பவழப்பூ வாய்நோக?

மாமி அடித்தாளோ
    மல்லிகைப்பூச் செண்டாலே
மாமா அடித்தாரோ
    மருக்கொழுந்துச் செண்டாலே
[1] பாட்டி அடித்தாளோ
    பஞ்சுடைக்கும் கோலாலே
பாட்டன் அடித்தாரோ
    பசுவோட்டும் கோலாலே

---

கொங்கு நாட்டில் உழவும், நெசவும் பழகிய தொழில்கள் என்பதை இவ்வரிகள் விளக்குகின்றன.

அக்கை அடித்தாளோ
ஆவிரம்பூக் கையாலே
அண்ணன் அடித்தானே
அலரிப்பூக் கையாலே

அடிச்சாரைச் சொல்லியழு
ஆக்கினைகள் பண்ணுகிறேன்
தொட்டாரைச் சொல்லியழு
தோள்விலங்கு போடுகிறேன்
'யாரும் அடிக்கவில்லை
ஐவிரலும் தீண்டவில்லை
பசித்திடவே நானழுதேன்,
பாசமுள்ள என்தாயே!'

அரசர் குலம்

கட்டிக் கரும்பேஎன்
கண்மணியே பொன்மணியே
பட்டுக் கயிறேஎன்
பைங்கிளியே நீஉறங்காய்!
கண்ணுள் மணியானே
கண்ணை பாற்குடமோ
அழகு மணியானே
அவதார மானவனே!
[1] சுண்ணும்பும் மஞ்சளுமாச்
சுத்திஎறி கண்ணனுக்கு!
வேப்பிலையும் காப்புமா
விசும்பிஎறி கண்ணனுக்கு!

உறங்காத கண்ணுக்கு
ஊசிகொண்டு மையெழுதி

1. இவ்வரியை ஈழநாட்டாரும் பாடுவர்.

தூங்காத கண்ணுக்குத்
துரும்புகொண்டு மையெழுதி
வாசலிலே வன்னிமரம்
உங்கள், வம்மிசமோ ராசகுலம்
என், ராசகுலம் பெற்றெடுத்த
ரத்தினமே நித்திரைபோ!

அரும்பாய் உதித்தவனே!

கண்ணான தம்பிக்கு-நாங்கள்
காதுகுத்தப் போறோமென்று-உன்
பொன்னான மாமனுக்கு-நாங்கள்
போட்டோம் கடுதாசி!
அரும்பான மாலைகட்டி-என் கண்ணே
அவசரமாய் வந்தார்கள்!
தட்டுக்கொண்டு பொன்வாங்கி-என்கண்ணே
தராசுகொண்டு நிறைநிறுத்து
[1] அத்திக்காய் வாளிசெய்து-என் கண்ணே
மலர்ந்த நல்ல சிமிக்கிசெய்து
கோடி உடுத்திக் காது
குத்துமென்பார் சுந்தரர்க்கு!

முந்நூறு வெற்றிலையும்-என் கண்ணே
உனக்கு, முதல்மாமன் சீரும்வரும்
நானூறு வெற்றிலையும்-என் கண்ணே
உனக்கு, நடுமாமன் சீரும் வரும்!
கற்கண்டுத் தட்டுவரும்-என் கண்ணே
உனக்குக் கடைமாமன் சீரும்வரும்!
மார்நிறைந்த சந்தணமாம்-என் கண்ணே
உனக்கு, முடிநிறைய வெற்றிலையாம்!

1 இப்பாடல் வரிகள் பல சோழநாட்டிலும் வழங்குகின்றன.

சேர்நிறைந்த களிப்பாக்காம்-என் கண்ணே
உனக்குச் சீர்கொடுப்பார் தாய்மாமன்!

பூவாய் உதித்தவனே-நாங்கள் செய்த
புண்ணியத்தால் வந்தவனே!
அரும்பாய் உதித்தவனே-நாங்கள்செய்த
அருந்தவத்தால் வந்தவனே!

காணிக்கை கொண்டுகண்ணே!-உங்கள் ஐயா
கடைத்தெருவே போகையிலே
மாணிக்கம் என்றுசொல்லி-கண்ணே
உன்னை, மடிப்பிச்சை தந்தாரோ!

பூத்தந்தால் வாடுமென்று-கண்ணே
பிள்ளை தந்தார் தாலாட்ட!
மாலை தந்தால் வாடுமென்று-கண்ணே
மழலை தந்தார் தாலாட்ட!

மாணிக்கத்தில் மாரகண்டி-என் கண்ணே
வச்சிரத்தால் பொன்பதக்கம்
யாருக்கு இடுவோமென்று-நாங்கள்
யோசித்திருக்கையிலே
)ங்கள் என்றுசொல்லி-என்கண்ணே
நீ தவம்பெற்று வந்தவனே!

# கவிஞர் தாலாட்டு




வெல்லம் இனிக்குமென்றும்
வேம்பு கசக்குமென்றும்
சொல்லப் பழகவில்லை
சுவைத்துப் பழகிவிட்டாய்!

[பக் - 129]

# கவிஞர் தாலாட்டு

(பகுதி ஒன்று)

மாணிக்கம் கட்டி
    வயிரம் இடைகட்டி
ஆணிப்பொன் ஞற்செய்த
    வண்ணச் சிறுதொட்டில்
பேணி உனக்குப்
    பிரமன் விடுதந்தான்
மாணிக் குறளனே! தாலேலோ!
    வையம் அளந்தானே தாலேலோ!

காஞர் நறுந்துழாய்
    கைசெய்த கண்ணியும்
வாஞர் செழுஞ்சோலைக்
    கற்பகத்தின் வாசிகையும்
தேஞர் மலர்மேல்
    திருமங்கை போத்தந்தாள்
கோனே! அழேல்! அழேல்! தாலேலோ!
    குடந்தைக் கிடந்தானே! தாலேலோ!

—பெரியாழ்வார்

தேவரையும் அசுரரையும்
திசைகளையும் படைத்தவனே!
யாவரும்வந் தடிவணங்க
அரங்கநகர்த் துயின்றவனே!
காவிரிநல் நதிபாயும்
கணபுரத்தென் கருமணியே!
ஏவரிவெம் சிலைவலவா!
இராகவனே தாலேலோ!

- குலசேகர ஆழ்வார்

## முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்

மாவி மயத்து மடப்பிடி பெற்று
வளர்ந்த விளங்களிறே!
மழ விடையேதிரு மமாடி கட்கென
வைத்த கவுத்துவமே!
மூல மெனக்குல நான்மறை யோலிடு
முழுமுதலே! மூவா
முக்கட்கனி கனியுஞ்சுவை யே! தனி
முத்திக் கொருவித்தே!
காலை இளங்கதி ருக்கெதிர் முதிருங்
கதிர்செம் பவழமுடன்
கதிர்முத் திட்டுவ ணங்கக் கன்னல்கொல்
கமுகுகொல் எனவளரும்
சாலி வயற்றமிழ் வேளூரடிகேள்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் தலைமைப் புலவா
தாலோ தாலேலோ

—குமரகுருபரர்

## ஏசுபெருமான் தாலாட்டு

முக்காலும் கன்னி
 முதிர்ந்த அருள்நலத்தாள்
தக்கமுனி சூசை
 தவத்தெழுந்த பாலகனே!
புல்லணையோ நீபடுப்பப்
 பொலன்அணைகள் இலையோ?
வல்லவனே நின்றனக்கு
 மாளிகைகள் தொலையோ?
பொன்னும் நவமணியும்
 பொலனூர் உயர்கலனும்
என்ன பயனதென
 எண்ணினையோ பாலகனே?
அன்பின் உருவாக
 அருளே விருதாக
இன்பின் நிறைவாக
 எழுந்தாயோ பாலகனே!
தேனும் தினைமாவும்
 தீங்கனியும் நல்லமுதும்
கோனர் கொணர்தல்
 குதுகலமோ பாலகனே!
ஏனோ கொணர்ந்ததனை
 இன்னும் அருந்திலை நீ
வானோர் புசிப்பதற்கு
 வைத்தனையோ பாலகனே?
ஆணிக் கல்லான
 அருமைத் திருவுருவே
மாணிக்கக் கல்லின்
 வளர்ஒளியே பாலகனே!

ஆசிரியர் காணு
அருங்கலைகள் ஆய்ந்துணர்ந்த
தேசுலவு செல்வச்
செழுங்கனியே பாலகனே !
போர்க்கருவி இன்றிப்
புவனத்தை ஆளுகின்ற
சீர்க்குவியல் சூழத்
திகழ்கின்ற பாலகனே !
பாவக் கறையகற்றிப்
பாரைப் புரக்கவரும்
தேவக் குழந்தையெனச்
சீராட்டும் பாலகனே
தீயரை நல்வழிக்குத்
தேடிப் பிடிப்பதுநின்
தூய குணவழகோ
சொல்லாய்நீ பாலகனே?
வந்ததெல்லாம் எம்மவரை
வாழவைக்கும் எண்ணமலால்
சொந்தத்தில் வேறு
சுகமுளவோ பாலகனே?
சீரியனே நேரியனே
தெய்வீகத் திருவே
ஆரமுதே தேங்கனியே
அன்பினுயர் குருவே !
பால்கொடுக்க ஆளிலையோ
பசிமிகையோ குளிரோ
தாலமெலாம் உள்ளுவப்பத்
தங்கமே கண்வளராய் !

-புலவர் எம். பி. மாஸ்கரனேஸ்

# நபிகள் நாயகம் தாலாட்டு

சீர்கொண்ட ஞாலமெல்லாம்
சிறந்த 'இசுலாம்' தழைக்க
நேர்கொண்ட தீனை
நெறிகொண்டு வந்தவரே!

முன்னே ஒளிர்வாகி
முதலோன் திருத்தூதாய்ப்
பின்னே நபியாய்ப்
பிறந்த முகம்மதுவே!

அண்ணல் அப்துல்லா
அருமை மகவாகப்
பெண்ணின் அழகுஆமினர்
பெற்றெடுத்த பாலகரே!

திக்குத் திகாந்தமொடும்
தேயந் தனக்குயர்ந்த
[1] மக்கம் பிறந்து
[2] மதீனம்ஆள வந்தவரே!

மட்டுலவுஞ் சொர்க்கம்
வாழ்மடவார் தாலாட்டத்
தொட்டிலில் துயிலும்
தூயோய், முகம்மதுவே!

மாணிக்கத் தொட்டிலதை
மடவார் பிடித்தாட்டப்
பூணிக்கையாய்க் கண்வளரும்
புண்ணியராய் வந்தவரே!

---

மக்கா

பார்க்கக் கனலெரியும்
 பாலைக் கடுஞ்சுரத்தில்
ஆர்க்குநன் னீரளிக்கும்
 அண்ணல் முகம்மதரே !
பார மலைபோல் நாகம்
 பதியிற் படம்விரித்தே
நேரில்லா திருக்கக்கண்டு
 நீள்துரும்பால் வதைத்தோரே !
கானகத்தில் ஆறுதனைக்
 கடுக வரவழைத்தே
ஈனமில்லா நீரளிக்கும்
 எங்கள் முகம்மதுவே !
புதியகிண றுப்புநீர்
 பொங்கினும் பதங்கனவ
நதியழைத்துக் காட்டவல்ல
 நன்மை முகம்மதுவே !
ஆதி படைத்த
 'அப்துகள்' அடங்கலுக்கும்
நீதிமணிப் பேரொளியாய்
 நின்ற முகம்மதுவே !
முத்தி லுதித்தவரே
 'மூமீன்கள்' கைப்பொருளே
நித்தன்ருள் வேதப்படி
 நெறிநடத்துங் கோமானே !
விண்ணி னரசே !
 சதுவேத முகம்மதுவே !
[1]கண்ணின்மணியே ! எங்கள்
 காரணரே கண்வளரீர் !

1 பாடியவர் பெயர் தெரியவில்லை.

# கவிஞர் தாலாட்டு

(பகுதி இரண்டு)

## ஆண்குழந்தை தாலாட்டு

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்

ஆராரோ ஆரரிரோ ஆரரிரோ ஆராரோ-
ஆராரோ ஆரரிரோ ஆரரிரோ ஆராரோ

காராரும் வானத்தில் காணும் முழுநிலவே!
நீராரும் தண்கடலில் கண்டெடுத்த நித்திலமே!

ஆசை தவிர்க்கவந்த ஆணழகே சித்திரமே!
ஓசை யளித்துமலர் உண்ணுகின்ற தேன்வண்டே!

உள்ளம் எதிர்பார்த்த ஓவியமே என்மடியில்
பிள்ளையாய் வந்து பிறந்த பெரும்பேறே!

சின்ன மலர்வாய் சிரித்தபடி பால்குடித்தாய்
கன்னலின் சாறே கனிரசமே கண்ணுறங்கு!

நீதி தெரியும்என்பார் நீள்கரத்தில் வாளேந்திச்
சாதியென்று போராடும் தக்கைகளின் நெஞ்சில்

கனலேற்ற வந்த களிறே, எனது
மனமே றுகின்ற மகிழ்ச்சிப் பெருங்கடலே!

தேக்குமரம் கடைந்து செய்ததொரு தொட்டிலிலே
ஈக்கள் நுழையாமல் இட்ட திரைநடுவில்

பொன்முகத்தி லேயிழைத்த புத்தம் புதுநீலச்
சின்னமணிக் கண்ணை இமைக்கதவால் மூடிவைப்பாய் !

அள்ளும் வறுமை அகற்றுமல் அம்புவிக்குக்
கொள்ளைநோய் போல்மதத்தைக் கூட்டியழும்
வைதீகத்தைப்

போராடிப் போராடிப் பூக்காமல் காய்க்காமல்
வேரோடு பேர்க்கவந்த வீரா, இளவீரா !

வாடப் பலபுரிந்து வாழ்வை விழலாக்கும்
மூடப்பழக்கத்தைத் தீதென்றுல் முட்டவரும்

மாடுகளைச் சீர்திருத்தி வண்டியிலே பூட்டவந்த
ஈடற்ற தோளா, இளந்தோளா, கண்ணுறங்கு !

'எல்லாம் அவன் செயலே' என்று பிறர்பொருளை
வெல்லம்போல் அள்ளி விழுங்கும் மனிதருக்கும்,

காப்பார் கடவுள்உமைக் கட்டையில்நீர் போகுமட்டும்
வேர்ப்பீர், உழைப்பீர் எனவுரைக்கும் வீணருக்கும்

மானிடரின் தோளின் மகத்துவத்தைக் காட்டவந்த
தேனின் பெருக்கே, என்செந்தமிழே கண்ணுறங்கு!

# ஆண்குழந்தை தாலாட்டு

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

ஆராரோ ஆராரோ ஆரிவரோ ஆராரோ

மாமணியோ முத்தோ மரகதமோ மன்னவர்தம்
தாம முடிமீது தயங்கும் வயிரமதோ !

முல்லை நறுமலரோ முருகவிழ்க்குந் தாமரையோ
மல்லிகைப் பூவோ மருக்கொழுந்தோ சண்பகமோ!

தெள்ளமுதம் உண்டு தெவிட்டாக் கனிஉண்(டு)எம்
உள்ளங் குளிர உரையாடும் பைங்கிளியோ

கற்கண்டு சீனி கனியுங் கனிந்தொழுகு
சொற்கொண்டுஎமக்குச் சுகமளிக்கும் பூங்குயிலோ

நெஞ்சிற் கவலையெலாம் நீங்கத் திருமுகத்தில்
புஞ்சிரிப்பைக்காட்டி எம்மைப்போற்றும் இளமதியோ

பல்லக்கில் அம்மான் பவனி வரும்பொழுது
மெல்ல மடியிருந்து விளையாடும் பைங்கிளியோ

பூமாலை வாடும்மணம் பொன்மாலைக் கில்லையென்று
பாமாலை வைத்தீசன் பாதம் பணிபவனோ

பாலமுதம் உண்டுதமிழ்ப் பாமாலை பாடியிந்தத்
தாலம் புகழவரும் சம்பந்தன் நீதானோ

கொன்றையணிந் தம்பலத்தில் கூத்தாடும் ஐயனுக்கு
வன்றொண்ட னாக வளர்ந்தவனும் நீதானோ

கல்லைப் பிசைந்து கனியாக்குஞ் செந்தமிழின்
சொல்லை மணியாகத் தொடுத்தவனும் நீதானோ

பூவில் அயனுமிந்தப் பூமீது வள்ளுவர்தம்
பாவின் நயமுணரப் பாலகனாய் வந்தானோ

கம்பன் கவியின் களியமுதம் உண்டிடமால்
அம்புவியில் வந்திங் கவதாரம் செய்தானே

தேவாரப் பாகும் திருவா சகத்தேனும்
நாவார உண்ணஎம்மான் நன்மகவாய் வந்தானே

ஆக்கம் பெருக அறம்வளர நாட்டையெலாம்
காக்கும் பெருமாள் கருணைத் திருவுருவோ

புள்ளி மயிலோடு புனங்காத்து நிற்குமந்த
வள்ளி மணவாளன் மதலையாய் வந்தானே

ஆயர் பதியில் அற்புதங்கள் செய்துநின்ற
மாயவனே இங்கெமக்கு மகவாகி வந்தானே

நாலாயிரக் கவியின் நல்லமுதம் உண்டிடமால்
பாலாழி நீங்கியொரு பாலகனாய் வந்தானே

பெண்கள் சிறுவீட்டைப் பேணா தழித்தவர்தம்
கண்கள் சிவக்கவைக்கும் கண்ணபிரான் நீதானே

ஆரடித்தார் நீயழுதாய் அடித்தாரைச் சொல்லியழு
சீரெடுத்த செல்வச் சீமான் திருக்குமரா

பாலை விரும்பினையோ பணிகாரம் வேண்டினையோ
சோலைப் பசுங்கிளியே சுந்தரமே சொல்லியழு

சப்பாணி கொட்டித் தளர்ந்தனையோ அல்லதுன்றன்
கைப்பாவைக் காகக் கலங்கி அழுதனையோ

தித்திக்கும் தேனும் தினைமாவும் கொண்டுன்றன்
அத்தை வருவாள் அழவேண்டாம் கண்மணியே

மாங்கனியும் நல்ல வருக்கைப் பலாக்கனியும்
வாங்கியுன் அம்மான் வருவார் அழவேண்டாம்

கண்ணுறங்கு கண்ணுறங்கு கண்மணியே கண்ணுறங்கு
ஆராரோ ஆராரோ ஆரிவரோ ஆராரோ.

# பெண்குழந்தை தாலாட்டு

*தமிழறிஞர் ராய. சொ.*

மானே! மரகதமே! மாமயிலே! மாதரசே
தேனே! திரவியமே! தீங்கனியே! கண்வளராய்
சோலை அருங்கிளியே சுந்தரியே! தெள்ளமுதே!
காலைக் கதிரொளியே! கண்மணியே கண்வளராய்

கோல மணிவிளக்கே! கோமளமே கோகிலமே!
பாலைப் பழிக்கும்மொழிப் பாவையே கண்வளராய்!

குழலின் ஒலியதனைக் கோதாக்க வந்த
மழலை மிழற்றும் அரு மாமணியே! கண்வளராய்

காந்தி அறமதனைக் காசினி எலாம்பரப்பப்
போந்த இளங்கொடியே! பொன்னே! நீ கண்வளராய்

கம்பர் தமிழின் கவியின் உயர்கருத்தை
இம்பர் வளர்க்கவரும் ஏந்திழாய்! கண்வளராய்

பாரதியார் பாட்டினுயர் பண்பைஇப் பாரறியச்
சீரதாச் செப்புதற்குச் செல்வமே! கண்வளராய்

தொல்காப்பியர் செய்த தொன்மையுடைச்சீர் நூலின்
ஒல்காப் பெருமை ஒளிபெறநீ கண்வளராய்

சங்கத் தமிழினிய சால்புடைய நூலாய்ந்தே
எங்கள் தவம்விளக்க ஏதமிலாய்! கண்வளராய்

பெண்ணைக் குறைவாகப் பேசும்நூற் கொள்கையெலாம்
மண்ணிற் புதைக்க வயிரியே! கண்வளராய்

கணவன் பிழைபொறுத்த கண்ணகிபோற் கற்பை
அணிகொள் பொறுமையொடு ஆள்வதற்குக் கண்வளராய்

பெண்ணடிமை என்றுசொலும் பேதைமட வார்த்தைகள்
கண் திறக்க வந்தபெரும் கற்பகமே! கண்வளராய்

வேற்று நாடாள விழையும் மடக்கொள்கை
ஏற்றுளார் புன்மை இடியநீ கண்வளராய்

சாதியால் மேல்கீழும் சாதிக்கும் வன்கண்ணர்
பேதையார் என்றறியப் பெண்ணரசே கண்வளராய்

சிறக்கும் தமிழ்மொழியில் சீலம் செறிந்த
அறத்தை இனிதருளும் ஔவையாள் நீதானே

மற்றோன் மனம்புகுதல் மாசுமகட்கு என்றந்நாள்
சொற்ற மருதிளனும் தொல்மகளும் நீதானே!

தீர்த்தன் அறம்வளர்த்த செல்வினனும் எங்கள்சீர்ச்
சாத்தனார் சாற்றுமணி மேகலையும் நீதானே!

பாடிக் கொடுத்தும் பரமன் அடியிணைக்குச்
சூடிக் கொடுத்தஇளந் தோகையாள் நீதானே!

சீரைப்பார்த் துக்கணவன் செல்லத் தமிழ்பாடிக்
காரைக்கால் வந்தஉயர் காரிகையும் நீதானே!

செங்கோன்மை நாட்டியே தென்பாண்டி நாடளித்த
மங்கையர்க்குப் பேரரசாம் மாதரசி நீதானே

தெள்ளு தமிழில் திறம்பா அறமுரைத்த
வள்ளுவனை ஈன்றெடுத்த மங்கைநல்லாள் நீதானே

செஞ்சொல் அமிழ்தால் சிலம்பை இசைத்தஉயர்
அஞ்சொல் இளங்கோவின் ஆய்ச்சியாள் நீதானே!

# பெண்குழந்தை தாலாட்டு

*நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை*

[அதிட்ட வசமாகக் காவிரியில் கிடைத்த குழந்தையை
ஒரு படகோட்டியின் மனைவி தாலாட்டுதல்]

ஆராரோ ஆரிரரோ அம்மா நீ கண்ணுறங்கு
பேரேதோ ஊரெதுவோ பெற்றவர்கள் யாரெவரோ

சீராரும் காவேரித் தேவி திருவருளால்
வாராமல் வந்துதித்த மாமணியே கண்ணுறங்கு !

ஆழக் கரைபுரளும் காவேரி ஆற்றருகே
ஏழைப் படகோட்டி என் கணவன் ஆனாலும்

கூழைக்குடித்துறங்கும் குடித்தனந்தான் என்றாலும்
கோழைகள் அல்லவம்மா குறைச்சல் உனக்கேதுமில்லை

நாளைக் கணக்கெண்ணி நல்ல நல்ல சம்பளத்தில்
ஆளை மிரட்டுகின்ற அதிகாரம் இல்லையம்மா !

வேளைபொழுதில்லாமல் வேலைசெய்யும் சீவனந்தான்
காளி குலதெய்வம் காத்திடுவாள் கண்ணுறங்காய்

அதிகாரம் என்றுசொல்லி அநியாயம்செய்தறியோம்
சதிகாரத் தந்திரத்தால் சம்பாதித் துண்பதில்லை

துதிபாடிப் பொய்பேசிச் சுகித்திருக்கும் சூதறியோம்
கதிகேடு வந்துவிடக் காரணங்கள் இல்லையம்மா

வாது வழக்கறியோம் வம்புதும்பு செய்தறியோம்
சூது புரிந்தறியோம் பொய்ச்சாட்சி சொன்னதில்லை

நீதிநெறிதவறி நிந்தைசொல்ல நின்றதில்லை
ஏதும் ஒருகெடுதி இங்குவர ஞாயமில்லை

வேலையின்றிக் கூலிகொள்ளும் வித்தைகளைக்கற்றறியோம்
கூலியின்றி வேலைகொள்ளும்கொடும்பாவம்செய்தறியோம்'

காலையென்றும் மாலையென்றும் காலமின்றிப் பாடுபட்டு
நாலுபணம் வந்தாலும் நல்லசுகம் செய்துவைப்போம்

தேடிப் புதைத்துவைத்து வயிறாரத் தின்னாமல்
வாடிப்பசித்து நொந்து வந்தவரை நிந்தைசொல்லி

ஓடி ஒளிந்துகொள்ளும் உலுத்தரல்ல நாங்களம்மா!
நாடிஒரு தீம்புவர ஞாயமில்லை இவ்விடத்தே

கோபம் மிகுந்தாலும் குத்துச்சண்டை வந்தாலும்
பாவம் பழிகளுக்குப் பயந்தொதுங்கும் எங்களுக்குச்

சீவன் இருக்குமட்டும் தேகம் உதவும் அம்மா!
தேவி துணையிருப்பாள் தெள்ளமுதே கண்ணுறங்கு

பள்ளிப் படிப்பறியோம்பட்டணத்துப் பேச்சறியோம்
வெள்ளைத் துணியறியோம் வீண்பிலுக்குச் செய்தறியோம்

கள்ளப் பிழைப்பறியோம் காவேரி சாட்சியம்மா!
உள்ளபடி இங்குனக்கு ஒருகுறையும் இல்லையம்மா!

## கண்ணுறங்கு!

கவிஞர் வாணிதாசன்

சீர்மேவும் கன்னித் திருநாட்டின் முன்னோர்கள்
பேர்சிறக்கப் பெற்றோர் பெயர்சிறக்க வந்தவனே!

கண்ணே! என்கண்மணியே! காதற் பெருவிளைவே
எண்ண இனிக்கும் எழிற்கவிதை உட்பொருளே!

குட்டிப்புலியே! குளிர்கடலின் மேலெழுந்த
கட்டிப் பசும்பொன்னே புத்தொளியே கண்ணுறங்கு

கட்டைவிரல் கற்கண்டோ? கண்ணுறக்கம் கொள்ளாது
தொட்டில் உலகில் துடுக்கெல்லாம் செய்கின்றாய்,

சின்னக் குளத்து வரால்குஞ்சு போலுனது
முன்காலைத் தொட்டிலிலே முட்டிமுட்டிக் கத்துகின்றாய்

தீட்டிவைத்த மைகரைந்தால் செல்வமே நான்தாளேன்,
பாட்டி சிடுசிடுப்பாள் பைந்தமிழே கண்ணுறங்கு!

அப்பனின் நீள்மூக்கை அப்படியே ஒட்டிவந்த
செப்புச் சிறுசிலையே சித்திரமே நம்நாட்டில்

சாதியென்ற ஒன்று தமிழை அழித்ததடா!
வேதியனும் தன்பெயரை வெட்டிவிட்டான் ஆதலினால்

சாதி அழிந்ததென்று சாற்றுவது பொய்ப்பேச்சாம்
பாதியில் வந்துநம் பண்பழித்த ஆரியத்தைத்

தீய்த்துப் பொசுக்கச் செல்வமே கண்ணுறங்கு
வாய்த்த பெரும்பேறே மணியேநீ கண்ணுறங்கு

கண்ணிரண்டும் மூடாது கத்தி அழுதிருந்தால்
மண்ணில் உனைநம்பி வாழ்வதுதான் எப்படியோ?

எங்கும் நிலவிவரும் ஏழை பணக்காரன்
கங்கை வழிச்சரக்கு காவிரிக்குச் சொந்தமல்ல

சிங்கத் திருமகனே அன்பே எனதுயிரே
இங்கிந்தத் தொல்லை அறவே அழிந்துவிட்டால்,

முன்னோர்கள் போல்மக்கள் செல்வம் முதிர்ந்துவிடும்
சின்னவிழி தூக்கிச் சிரிக்கின்றாய்; செய்வாயோ?

செய்வாய்நீ என்கண்ணே செய்வாய் தமிழ்வீரம்
கைகால் உயர்த்திநீ காட்டுகின்றாய் கண்ணுறங்கு

நெஞ்சில் பெருஉரமும் நேர்மைக்கே எந்நாளும்
அஞ்சாது வாழ்வதுவே ஆண்மைக் கறிகுறியாம்

ஊரார் எதிர்ப்பெல்லாம் ஒன்றாய்க் குவிந்தாலும்
கார்வானம் ஓர்நாள் கவின்வானம் ஆவதுண்மை!

பால்குடித்து விட்டாய்; பதுமைபோல் தூங்காமல்
காலுதைத்துக் கத்துவது வேண்டாம் என்கண்ணே

வளமிகுந்த இந்தத் திருநாட்டில் வாழ்வோர்
உளம்விரிந்தோர் இல்லை; உழைத்தாலும் கேளார்

அதற்காக அஞ்சாதே அஞ்சாதே முத்தே
அதைமாற்ற வாழ்வதுவே இன்பமடா இன்பம்

குடியரசு நாட்டின் இளங்கரும்பே தேனே
குடியரசு நாடென்று நம்வாழ்வைத் தீய்க்க

அடித்தொடுக்கி விட்டாலிங் காரடங்கப் போறார்?
தொடுப்பார் பகைவெல்வார் சொல்லவே தேவையில்லை

போர்வாள் எடுத்துப் புறமுதுகே காட்டாத
ஊரின் இளவரசே உறங்குநீ கண்ணுறங்கு

நாளைத் திருநாடு நம்மதடா நாம்இனிமேல்
தோளைச்சதைச் சுமையாய்த் தூக்கித் திரியோமே

இல்லார்கள் இல்லாத இன்பத் திருநாட்டைக்
கல்லார்கள் இல்லாத கன்னித் தமிழ்நாட்டைச்

சாதிச் சனியும் தமிழ்ப்பகையு மில்லாத
ஆதித்தமிழ் நாட்டை அடைவோம்நீகண்ணுறங்கே!

# வெண்ணிலவே கண்வளராய் !

கவிஞர் முடியரசன்

கடைந்தெடுத்த பொற்சிலையே கண்காணுந் தேவே
நடந்துவரும் வெண்ணிலவே நாண்மலரே கண்வளராய்

வீட்டுப் பெரியோர் விளைத்துவரும் என்துயரை
ஓட்டப் பிறந்தவனே உத்தமனே கண்வளராய்

புலர்காலை வீசுகின்ற பூங்காற்றே நின்றன்
மலர்விழிகள் நீர்சிந்த மனம்பொறுக்க வல்லேனே

பசியால் அழுதாயோ பாலகனே கண்கள்
கசியாதே அன்போடு கலந்துபால் நான்தருவேன்

நிலத்தில் எழுஞ்சுடரே நித்திலமே என்கலியை
விலக்கப் பிறந்தவனே வீட்டிற் கணிகலமே

உழைப்பார் நிலையுணர்ந்தோர் ஒண்டவந்தோர் இங்கே
களைப்பாறித் தீங்கிழைக்கும் கயமைக் குணங்கண்டோ

தமிழ்வளர ஏதும் தடங்கல் வருமென்றே
இமைமூட மனமின்றி இருக்கின்றாய் என்கண்ணே

மடங்கல் உரங்காட்டும் மாமல்லர் காத்திடுவார்
தடங்கல் வாராது தம்பிநீ கண்வளராய்

பழிப்புரைகள் வந்தணையப் பார்த்திருக்க மாட்டார்கள்
ிட்டார் உன்னூட்டார் வீணாக அஞ்சாதே

பன்மொழிகள் கற்றுணர்ந்த பண்புடையார் வாழ்வதனால்
புன்மையிங்கு நேராது பூஞ்சிட்டே கண்வளராய்

நம்நாட்டைச் சீரழிக்கும் நாலுவகைச் சாதிகளை
வெந்காட்டச் செய்த விறலோனே கண்வளராய்!

ஆளும் மொழிஒன்றே அதுவுந் தமிழென்றே
நாளும் சொலுமென்றன் நாயகன் மார்பகமும்

பாட்டன் தடந்தோளும் பாய்ந்து விளையாடி
வேட்டைக் களமாக்கும் வீரனே நீபிறந்த

நாட்டைக் கெடுக்கும் நயவஞ்சப் போக்குக்குச்
சாட்டைஅடிகொடுக்கச் சார்ந்தவனே கண்வளராய்!

செஞ்சொற் சிலம்பிருக்கச் செம்மைக் குறளிருக்க
அஞ்சற் கிடமில்லை அய்யன்மார் தேடிவைத்த

சங்கத்துச் செல்வங்கள் சாந்துணையும் போதுமடா
வங்கத்துச் சென்றேடி வாணிகம் செய்வதுபோல்

பாரெல்லாம் சென்று பரப்பிடுவாய் நின்மொழியை
ஊரெல்லாம் ஓடி ஒலிஎழுப்ப வேண்டுமடா

ஆண்ட இனத்தாரை ஆட்சிக்குக் கொண்டுவர
வேண்டு மெனக்கருதும் விழைவுடனே நீவாழ்வாய்!

அறம்நாட்ட வந்தவனே ஆணவம்சேர் மாற்றார்க்கு
மறம்காட்ட வந்தவனே மாமணியே கண்வளராய்!

# தமிழ்ச்செல்வி தாலாட்டு

.கவிஞர் தில்லை த. அழகுவேலன்

கண்ணே கண்ணுறங்கு நீகான மயிலுறங்கு
பெண்ணே உன்னாலே பெரும்பேறு நானடைவேன்

மதுரைத் தமிழ்ச்சங்கம் மன்னு தமிழ்ச்செல்வி
புதுமை பலகாணப் பூத்த இளங்கொடியே!

உன்பாட்டி மாணிக்கம் உன்னழகைக் காணவில்லை;
உன்பாட்டன் தாண்டவமும் உன்னுடலைத் தீண்டவில்லை

என்றகா ரணத்தாலோ ஏங்கிநீ அழுகின்றாய்;
உன்கண்ணீர் கண்டால் உன்னப்பா நொந்திடுவார்

சின்ன இமைக்கதவைச் செல்விநீ பொருத்திடுக
உன்அண்ணன் வந்தால் உறங்கவிடான் கண்ணுறங்கு

ஈரோட்டுத் தாத்தா இருக்கவுனக் கென்னகுறை?
பாரோர் புகழும் பைந்தமிழே கண்ணுறங்கு !

தமிழ்த்தாத்தா மயிலை சிவமுத்து தானிருக்க
அமிழ்தேஎன் அன்பேநீ அஞ்சாமல் கண்ணுறங்கு

அன்னை தமிழ்மொழியை ஆட்சி மொழியாக்கச்
சின்ன அமைச்சு முதல் எல்லாரும் செப்புகின்றார்

பின்னையுனக் கென்னகுறை பேசாமல் கண்ணுறங்கு
என்ன விளைவென்றே இருந்துபின் சாடுவோம்

தமிழுக்குக் கேடென்றால் தலைகொடுக்க நானிருக்கேன்
அமிழ்தாம் தமிழ்ச்செல்வி அழாஅதே கண்ணுறங்கு!

## தாய்க்குலத்தின் கண்

கவிஞர் வே. அண்ணுமலை

ஆராரோ ஆரிவரோ ஆராரோ ஆரிவரோ
சீராரும் எங்கள்குலச் செல்வமே கண்வளராய்!

தாயாக்கி என்னைத் தனிப்பெருமை தந்திட்ட
சேயே மலர்மணமே செந்திருவே கண்வளராய்!

தாழை மலர்மணமே தாய்க்குலத்தின் கண்ணூற்றே
வாழையடி வாழையென வளர்ந்தோங்கி வருகின்ற

மன்பதையின் தாய்க்குலமாய்வந்துதித்த பெண்ணணங்கே
இன்பத் திருவுருவே எழில்நிறைந்த பெட்டகமே

கண்ணிலே ஒன்றென்று காவியங்கள் கூறுகின்ற
பெண்ணின் பெருமைதனைப் பேசவந்த பெண்ணமுதே

அரும்பி இதழ்விரிந்து அவனியெலாம் மணம்பரப்பும்
விரும்புமலர்ப் பூந்துணரே விளங்கிழையே கண்வளராய்

சங்க இலக்கியத்தில் தன்குலத்தை வாழவைத்த
அங்கமெலாம் தமிழ்மணக்கும் ஔவையவள் உன்குலமே

விற்பிடித்த பாண்டியனை வென்று பழிதுடைத்த
கற்புநெறி தவருத கண்ணகியும் உன்குலமே

சீர்மேவும் ஓர்மகனைத் திருநாட்டைக் காப்பதற்குப்
போர்மேவிச் செலவிடுத்த பூங்கொடியும்உன்குலமே

தாய்நாட்டை உலகினிலே தலைநாடாய்ச் செய்வதற்குச்
சேய்நாட்டுப் பெண்களெலாம் செய்கின்ருர் தொண்டுநிதம்

இவ்வுலகில் உன்ஞேடும் ஏற்றமுடன் வாழ்வதற்குச்
செவ்வையாய்த் தொண்டுசெய்வாய் செல்வத்தமிழ்மகளே

வாழ்க்கைத் துணைவியென வருகின்ற பெண்ணினுக்கு
வாழ்க்கைத்துணை நலத்தை வகுத்துள்ளான் வள்ளுவனும்

வள்ளுவன்செய் திருக்குறளை மறுவறநீ கற்றுணர்ந்து
எள்ளின் முனையளவும் ஏதமின்றி வாழ்ந்திடுவாய்

துணைவியுமாய்த் தோழியுமாய்த் துணைவனுக்கோர் மந்திரி
மனைவியுமாய் மாதாவாய் மகளே நீ வாழ்ந்திடுவாய் [யாய்

தேனும் தினைமாவும் சேர்த்துப் பிடித்தாற்போல்
ஊனை உருக்குமுயிர் ஓவியமே கண்வளராய்

சின்னவிழி மலர்மூடிச் சிந்தனையை உள்ளடக்கிக்
கண்வளராய் கண்வளராய் கனகமணித் தொட்டிலிலே!

## பெண்ணரசி கண்ணுறங்காய்!

கவிஞர். கதி. சுந்தரம்

இதயப் பெரும்வீட்டில் என்றும் இருக்கும்
புதையற் பெருந்தனமே பூமலரே கண்வளராய்!
வயிரத்தின் பெட்டகமே வார்த்தெடுத்த பொற்சிலையே
உயரத்தில் தொங்கும் உயர்வாம் மரக்கனியே!
முன்றில் விளையாட முனைந்தே வளர்ந்துவரும்
இன்றலர்ந்த தாமரையே ஏழிசையே கண்வளராய்!
வெற்றி முரசடித்து மேதினியைத் தான்வென்ற
பொற்புடையாள் கண்ணகி போர்ப்புகழும் உன்னதுவோ
வந்த விருந்தினர்க்கு வாயாரச் சோறிட்டுப்
பிந்தி அருந்திடுவாய், பெண்ணரசிகண்ணுறங்காய்!
பாரி மகளிரெனப் பண்பாட்டில் நீசிறந்து
மாரி எனவழங்கி மாநிலத்தில் வாழ்ந்திடுவாய்
உன்றன் கணவர்க்கு உற்ற பெருந்துணையாய்
மங்காத காவியமாய் மாமகளே வாழ்ந்திடுவாய்
கலையில் வளரும் களையைப் பிடுங்கும்
மலையின் உறுதியுறு மாத்தமிழே கண்வளராய்!
பெண்குலந்தான் வீழப் பின்னேற்றப்பாதைசெலும்
புன்குலத்தார் வீழ்ச்சியுறப் போர்தொடுப்பாய் என்மகளே!
தென்றல் மலர்மணமே, தெவிட்டாச் சுவைப்பொருளே!
மன்றல் இசையொலியே மாநிதியே கண்ணுறங்காய்!
ஓடிவரும் வெள்ளமே! ஓயாப் பெருவரவே!
பாடிவரும் வண்டேநீ பாட்டிசைக்கக் கண்ணுறங்காய்!
பொங்கும் தமிழ்க்கடலில் புதுமை புகுத்திவளன்
தங்கும் தமிழரசி! தாலாட்டக் கண்ணுறங்காய்!

# தமிழ் மகவு தாலாட்டு

தமிழண்ணல்

ஆராரோ ஆரிரோ ஆராரோ ஆரிரோ

கன்னித் தமிழில்நீ கடைவாய் அமுதூற்ற
அன்பே அழகுருவே ஆரமுதே ஏனழுதாய்?

தண்ணீர் முகம்தழுவும் தாமரைபோல் நின்முகத்துக்
கண்ணீரைக் கொட்டிக் கதறி அழைத்ததுமேன்?

அல்லிப்பூ வாய்திறந்து அம்மா எனவழைத்த
சொல்லிற்கே வந்துவிட்டேன் சோர்ந்தேன் அழுகின்றாய்

தன்னைத் தமிழனென்று தான்சொல்லக் கூசுகின்ற
பின்னறிவுத் தமிழரிடைப் பிறந்ததற்கோ நீ அழுதாய்?

கன்னித் தமிழுருவே கற்கண்டே நீஉன்றன்
சின்னக் கைகொட்டிச் சிரித்துவிட்டால் போதாதோ

இன்பக் கடலாடி எடுத்ததொரு நல்முத்தே
அன்புக் கொடிகமழ அலர்ந்த மலர்மணமே

துன்பந் தொலைந்திடவே தோன்றி வளர்வாழ்வில்
அன்பை அறமாக்கி அரசாட்சி செய்யவந்தாய்

கடல்சூழ் குமரிமுனை கார்தங்கு வடமலைக்கு
இடையே வளர்நாடு இன்னுணர்வே உன்னுடு

தொல்லுலக நல்வாழ்வு தொடரும் வரலாறும்
பல்கலைகள் மிகவுயர்ந்த பண்பாடும் உன்னதுதான்

பெறற்கரிய பேறே பிறர்மனத்தைத் தான்கவரும்
சிறப்புடைய செல்வமே சீர்வாழ்வே கண்வளராய்

வெல்லம் இனிக்குமென்றும் வேம்புகசக்குமென்றும்
சொல்லப் பழகவில்லை சுவைத்துப் பழகிவிட்டாய்

தாய்ப்பால் அமுதுணவோ தகுமுணவைச்
சுவைப்பதற்கோ
வாய்ப்பாகு ஊற்றெடுத்து வடிய முகம்பார்த்தாய்

தாலாட்டித் தூங்கவைத்துத் தளிர்முகத்தைப்
பார்க்கையிலே
மேலான தாய்பதற மெல்லச் சிரித்ததுமேன்?

கண்வளராய் என்றன் கருத்தை வளர்த்திடுவாய்
பண்வளர்க்கும் பசுந்தமிழே,பால்வடிவே தாலேலோ

முழங்காலை மண்டியிட்டு முன்னேக்கி நீதவழ்ந்து
வருங்கால முன்னேற்ற வாழ்வை விளக்குகிருய்

தளிர்போல் எழுந்தசைந்து தாவி நடந்திடும்நீ
வளர்ச்சி குறைவென்ருே வளைந்து விழுகின்ருய்

வாழ்க்கைத் துணைவழியில் வயது முதிர்ந்துவிட்டால்
வாழ்க்கைத் துணையாக வாய்த்தனையே கண்மணியே

சான்ருேன் எனவுன்னை ஆன்ருேர்கள் தாம்புகழ
ஈன்ருளின் மனத்திற்கு எழுச்சிதர வந்தனையோ

பிள்ளைகளைப் பெற்றுவளர் பேற்றைச் சிறப்பிக்கும்
வள்ளுவனின் வாக்குக்காய் வளரும் இலக்கியமே!

சொல்லிற் சுவையூற்றித் தொட்டஇடம் தான்
இனிக்கும்
அல்லி மலர்ப்பூவே அன்புருவே கண்வளராய்!

# பிறமொழிகளில் தாலாட்டு

## மலையாளமொழித் தாலாட்டு

(தமிழ் எழுத்துப்படி)
தாராட்டு—(தாலாட்டு)
அம்மையும் குட்டியும் (தாயும் சேயும்)

ராராரோ கண்மணியே! பொன்மணியே ராராரோ
ராராரோ பைங்கிளியே, [1] உம்மதராம் கண்மணியே!
[2] கரையாதே பைங்கிளியே! பொன்மணியே ராராரோ!
தாராட்டாம் தொட்டில்பிடிச்சு, ராராரோ ராராரோ!
கண்மணியே ராராரோ! பொன்மணியே ராராரோ!
ஓமனே நீயுரங்ஙு-கரையறது-தோமனே நீயுரங்ஙு!
(ஓமகனே நீஉறங்கு அழாதே, பிரியமகனே நீஉறங்கு)
கூம்புன்னு தாமராம் கூம்புன்னு மந்தாரம்
கூம்புவா நின்மிழிகள்!
(தாமரை குவிந்தது, ஒளிகுறைந்தது, நின்விழிகளை மூடிக்கொள்)
போயி பகல்மயங்ஙான்-தளர்ந்தா
போயி ரெவியுரங்ஙான்!
(பகல்பொழுது ஒளிமங்கித் தளர்ச்சியுற்ற ஞாயிறு உறங்கப் போய்விட்டான்)
விருட்ச முறக்கமாய், பட்சி மயக்கமாய்
இட்சணம் நீயுரங்ஙு!
(மரங்கள் உறங்கிவிட்டன, பறவைகள் உறங்கிவிட்டன உடனே நீஉறங்கு)
மேகக் கிடக்கைமேலே விரிக்குன்னு
மேல்விரி பந்திசாலே
விண்மணிப் பயிதங்கள் வீண்டுமுறக்கமாய்
கண்மணீ! நீயுரங்ஙு!

(மேகப் படுக்கைமேலே ஒளிவிரிப்பு விரித்து, விண்ணில் உள்ள மணிகளாம் மீன்கள் உண்டு உறங்கச் சென்று விட்டன. கண்மணீ! நீ உறங்கு!)

---

1. முத்தம் தருகிறேன். 2. அழாதே.

உதவியவர்: திருமதி கே. வி. நாதன். (ஆல்வாய்)

## கன்னடம்

(தமிழ் எழுத்துப்படி)

ஜோஜோ கந்தர்ப கோடி லாவண்யா
ஜோஜோ வ்ருந்தாரக வரசிரோ ரன்னு
ஜோஜோ முனிமன மதுப கமலவே
ஜோஜோ நந்தன சுக்ருதத பலவே—ஜோ-ஜோ

ஹொன்ன தொட்டில மேலெ மணிமய மாலெ
ரன்னத பட்டிய மேலு கட்டுகளு
சென்ன தொட்டிலொ ளிட்டு கிருஷ்ண மூருதிய
கன்யெய ரெல்லரு பாடி தூகிதரு—ஜோ-ஜோ

சசிமண்டல போல்வ மொகத சென்னிகனே
எஸெவ கிருகெஜ்ஜெய த்வனிய பாலகனே
ஹொஸ கெந்தாவரெ யந்தத பாதா
பிஸருஹனனெ தூகுவெ நின்ன கந்தா—ஜோ-ஜோ

குணநிதிய நின்ன எத்திகொம் பெந்தாரெ
மனெய கெலஸ யாரு மாடுவரய்யா
மினகெ சுகநித்திரை தந்துகோ பேகா
பணிசயனென நின்ன பாடிதூகு வேனு-ஜோஜோ-

க்ஷீராம்புதி வாஸ ஜனமன போஷா
மாராஜனக ஸ்ரீச துரித விநாசா
நாராயண தாஸ ஹ்ருதய நிவாசா
காருண்ய தோரெந்து பாடி தூகிதரு—ஜோ-ஜோ

கன்னடம்

அனங்கவேள் கோடிப்பேர் அழகெல்லாம் கொண்டவனே
பிருந்தா வனத்துதித்த பேர்பெற்ற இரத்தினமே!
முனிவர் மனவண்டு மொய்க்கும் மரைமலரே!
கனிவான நந்தன் கண்டதவப் பயனே!

தங்கத்தால் செய்து தனிமணிகள் பதித்திட்ட
இரத்தின விதானமுள்ள எழிலார்ந்த தொட்டிலிலே
கண்ணனை வைத்துக் கன்னியர்கள் எல்லோரும்
தாலாட்டுப் பாடித் தாலாட்டு கின்றார்கள்.

சந்திர மண்டலம்போல் சாரும் எழில்வதனா!
சிந்தி ஒலிசிதறும் சிறுசதங்கைப் பாலகனே!
அன்றலர்ந்த தாமரைபோல் அடியிணையை உடையவனே!
அழகே! என் செல்வமே! ஆட்டுகின்றேன் தாலாட்டு.

குணநிதியே உன்னைக் கொஞ்சி அணைத்திருந்தால்
மனைப்பணியைச் செய்பவர்கள் மாநிலத்தில் யாரப்பா?
நல்லதொரு நித்திரையை நண்ணிடுவாய் ஒல்லையிலே
அரவுப் பள்ளியிலே அறிதுயிலைச் செய்பவனே!
அழகாகப் பாடி ஆட்டுகின்றேன் தாலாட்டு.

பாற்கடலில் பள்ளிகொண்டு பார்தாங்கும் காவலனே!
மக்கள் மனத்திற்கு மகிழ்ச்சி தருபவனே!
மன்மதனின் தந்தையே! மாமகளின் கேள்வனே!
துயரந்தனை இங்கு தொலைக்கின்ற தூயவனே!
நாராயண தாசன் நல்லுளத்தில் வாழ்பவனே!
அருள்புரிவாய் என்றுன்னை ஆட்டுகின்றேன் தாலாட்டு.

---

பாவாக்கம்: கவிஞர் திரு. வே. அண்ணாமலை.

## தெலுங்கு

[ தமிழ் எழுத்துப்படி ]

ஆட மாணிக்கமே பாட மாணிக்யம்!
நட்டிண்ட அம்மாயி ரத்ன மாணிக்யம்!
ஆடுகோனி அப்பாயி வச்சே காபோலு ?

அந்தெள்ள சாப்புள்ளு பந்தேள்ள லோன
சதுவுகோனி அப்பாயி வச்சே காபோலு
சரஸ்வதி சப்புள்ளு சாவிள்ள லோன

அந்தரீ மாமல்லு மேனமாமல்லு ;
அம்மாயி மாமல்லு சந்தமாமல்லு !

ஏடவகு எடவகு வேர்ரி நாகன்னு
ஏடிஸ்தே நீகள்ளு நீலாலு காரு
நீலாலு காரிதே நே கூடலேநூ
பாலயின காரவே பங்காரு கக்கு !

## தெலுங்கு

ஆடும் மாணிக்கமே, என்பாடும் மாணிக்கமே!
முற்றத்தில் தவழுமென் கண்மணி மாணிக்கமே!
செல்லக்கண்ணன் விளையாடிவிட்டுத் திரும்புகிறானோ?

பாதச்சலங்கையொலி கொட்டகையருகில் கேட்கிறதே
பள்ளிக்கூடம்விட்டு என்கண்மணி திரும்பிவிட்டானோ?
அருமைப்பெண் சரசுவதி கைகொட்டுமொலியும்
கேட்கிறதே!

நம் எல்லாருக்கும் மாமா நம் சொந்தமாமா;
இந்தப் பெண் சரசுக்கு மாமா, அம்புலிமாமா!

அழாதே! அழாதே! அசட்டு நாகண்ணா!
அழுதாலுன் கருமணிகள் விழுந்துவிடுமேடா!
கருமணிகள் விழுந்தால்நான் பொறுக்க முடியுமோடா?
கண்ணா! உன்தங்கக் கண்ணில் [1]பால்வழிய வேண்டுமடா!

தமிழில்: திரு. ர சௌரிராஜன் (சௌரி)

[1] மங்களமுண்டாக வாழ்த்தியது.

# LULLABY

## WILLIAM BARNES

The rook's nest do rock on the tree-top,
Where few foes can stand;
The martin's is high and is deep
In the steep cliff of stand;
But thou, love a sleeping where footsteps
Might come to thy bed,
Hast father and mother to watch thee
And shelter thy head
Lullaby, Lilybrow, lie asleep;
Blest be thy rest!

And some birds do keep under roofing
Their young from the storm;
And some wi'nest-hoodings O' moss
And O'wool do lie warm.
And we will look well to the house roof
that O'er thee might leak
And the beast that might beat on thy window
Shall not smite thy cheek.
Lullaby, Lilybrow, lie asleep,
Blest be thy rest.

Lullaby—தாலாட்டு. Lull-என்பது, 'ராரா' என்பது போல் சந்தம். 'தூங்கச் செய்க' என்பது பொருள். தமிழில் சந்தம் பாட்டின் முதலில் வருகிறது; ஆங்கிலத்தில் இறுதியில் வருகிறது.

## ஆங்கில மொழித் தாலாட்டு

### கவிஞர் வில்லியம் பார்னெஸ்.

[ தமிழில்: தமிழண்ணல் ]

பகைவர்கள் அணுகவொண்ணுப் பறவைகள் கூடு, மேலே
உயர்ந்துள மரவுச்சிக்கண் ஊஞ்சல்போல் ஆடிநிற்கும்!
சிறியதோர் பறவைஇங்கே ஆழ்மணற் சாரலின்கண்
உயரத்தில்பொருந்திஇனுள்ளே கூட்டினில் உறங்கிப்போகும்!
அருமைசேர் குழந்தையேநீ ஆள்அடி அரவமுள்ள
உரிமைசார் வீட்டிலன்றே உறங்குவை தனைமறந்து!
உன்றனைக் கண்காணித்து உயிர்போலப் பாதுகாக்க
அன்புடை அப்பா,அம்மா அருகினில் இருக்கின்றார்காண்
ஆராரோ அல்லி மலர்விழியாய் கண்வளராய்!
கண்வளர்ந்து (இவ்வுலகில் கண்மணியே) வாழ்ந்திடுவாய்

கூடுகட்டி வாழ்ந்து, கூவுகின்ற குஞ்சுகளைப்
புயலைத் தடுத்துப் புரந்திடுமாம் தாய்ப்பறவை!
கூடுகட்குப் பாசிதனைக் கொண்டுவந்து கதவுவைக்கும்!
வீட்டுக்குள் கம்பளிக்குள் (விண்ணொளியே) கண்வளராய்
கூரை வழிநுழைந்து கொடியதொரு விலங்கினமும்
உன்னருகில் உள்ளசன்னல் தன்னிற் புகுந்துவந்து
(மாம்பழக்) கன்னத்தைக் கடித்துவிட மாட்டாது
காத்திருப்போம் வீட்டினிலே கண்வளராய் (குழந்தாய்நீ)
ஆராரோ அல்லி மலர்விழியாய் கண்வளராய்
கண்வளர்ந்து (இவ்வுலகில் கண்மணியே) வாழ்ந்திடுவாய்

---

'சேக்ஷ்பியர்' தாலாட்டு இசையமைக்கும் முறை:-

with melody

Sing in our sweet Lullaby; Lulla, lulla, lullaby; lulla, lulla, lallaby; Never Harm, nor spell, nor charm; Come our lovely lady nigh; So, good night with lullaby.

(A midsummer night's dream)

## A CRADLE SONG

### TENNYSON

What does little birdie say?
In her nest at peep of day
Let me fly, says little birdie,
Mother, Let me fly away!

Birdie, rest a little longer,
Till the little wings are stronger
So she rests a little longer,
Then, she flies away!

What does little baby say,
In her bed at peep of day?
Baby says, like little birdie,
Let me rise and fly away!

Baby, sleep a little longer,
Till the little limbs are stronger.
If she sleeps a little longer
Baby, too, shall fly away!

# புகழ்பெற்ற தொட்டிற் பாட்டு

(கவிஞர் டென்னிசன்)

(தமிழில் : தமிழண்ணல்)

பொன்னொளிசேர் காலையிலே சின்னஞ் சிறுபறவை
தன்னுடைய சிறுகூட்டில் என்னசொல்லிக் கூவியது?
என்னைப் பறக்கவிடு, என்தாயே பறக்கவிடு
என்றுசொல்லிக் கூவியது சின்னஞ் சிறுபறவை!

இன்னும்சற் றுறங்கிடுவாய் சின்னஞ் சிறுகுஞ்சே!
உன்னுடைய சிறகிரண்டும் உரம்பெறநீ கண்வளராய்!
என்றுதாய்ப் பறவைசொல, மேலுஞ்சற் றுறங்கிவிட்டுப்
பின்னர்ப் பறந்ததுகாண் சின்னஞ் சிறுபறவை!

பொன்னொளிசேர் காலையிலே சின்னஞ் சிறுகுழந்தை
தன்னரிய தொட்டிலிலே என்னசொல்லிக் கூவியது?
குஞ்சுப் பறவை கூறியது போல்தன்னைப்
பறக்கவிடச் சொல்லியன்றோ பைங்குழந்தை தேம்பியது!

"இன்னுஞ்சற் றுறங்கிடுவாய்" ஏலம்பூக் குழந்தாய்நீ!
உன்னுடம்பு வலுப்பெற்றால் ஓடி வெளிவரலாம்!
தாய்சொல்லைத் தட்டாமல் சற்றின்னும் கண்வளர்ந்தால்
சேய்ப்பறவை போலேநீ செவ்வானில் பறந்திடலாம்!